உ

திருச்செந்திலாண்டவன் துணை

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்



ஸ்ரீ காசிமடம் :: திருப்பனந்தாள்

சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சி

# வாழிய பல்லாண்டு

(ஆசிரிய விருத்தம்)

செந்திலின் மேவிய சேயவனின்
சீரருள் பெற்றஎம் திருமுனிவர்
நந்தமிழ் நன்னெறி நாடறிய
நாட்டிய நலந்திகழ் **குருபரனுர்**
செந்தமிழ் வாய்மலர்ந் தருளியுள்ள
தீஞ்சுவைப் பாடலின் தெள்ளமுதம்
வந்தெம துளத்தினில் வாழ்ந்திடவே
வழங்கிடும் **குருபரன் வாழியவே!** 1.

குருபரன் அருள்தரு குரைகழலும்
கொழிதமிழ் வெள்ளமும் திருநெறியும்
அருள்நிறை நெஞ்சினில் அமைத்துகப்போன்
அருட்கொடை பற்பல அமைத்தளிப்போன்
வருபவம் துடைக்கவல் **அருள்நந்தி**
மாமுனி மலரடி வாழ்த்திவரும்
திருவுடை நற்றமிழ்க் **குருபரனே!**
தீந்தமிழ் போல்நிதம் வாழியவே! 2.

எண்திசை வளர்புகழ் பரந்திடவும்
இன்சுவைத் தமிழ்நலம் இலங்கிடவும்
கண்டென மிளிர்தரும் கட்டுரையும்
கலைமணம் நிறைந்திடும் கவிபலவும்
பண்திகழ் இன்னிசைப் பாடல்களும்
படிப்பவர் நெஞ்சினைக் கொள்ளைகொள
வண்தமிழ் வளர்த்தொளிர் **குருபரனே!**
**வாழிய! வாழிய! பல்லாண்டே!** 3.

அன்பன்,
**பொ. முத்தரசு.**

வ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ

# உள்ளுறை

| வரிசை எண். | பொருள். | பக்கம். |
|---|---|---|

கட்டுரையாளர்

—★—

ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம்

# நீடூழி வாழியவே

* * *

உலகத்து மக்களெலாம் ஒன்றுபட்டே
உண்மையுடன் நாளுமினி துழைத்திடவே
நிலையில்லா வாழ்வெனினும் நன்னெறியில்
நிலைநிறுத்த வழிகூறும் நற்றெண்டர்!
மலைபோலும் இன்னல்நமை அணுகிடினும்
மருட்சிதனைப் போக்கிடுவார் அடிகளாரே!
கலைசுடரும் கலாசாலை, அறச்சாலை
கவினுறவே அமைத்திட்டார் அடிகளாரே! 1

தமிழ்நாடு செய்ததவப் பயனுயின்று
தலைவரென விளங்குகின்றுர் சைவத்திற்கே!
தமிழ்நாட்டில் அருணந்தி அடிகளாரே
தக்கபடி அறமதனைச் செய்கின்றுரே!
உமையருளால் அன்னூர்தம் அறப்பணிகள்
உலகேத்த எந்நாளும் ஓங்குகவே!
இமயம்போல் பரந்தஉள்ளம் அவர்மாட்டு
இவ்வுலகீர் சைவமதைக் காப்பீரே! 2

பதின்மூன்றும் யாண்டினிலே குருபரனே
பரவசமாய் மேன்மேலும் வாழியவே!
மதிபெருக்கி மொழி,சைவம் காத்துவரும்
மாண்புறுநல் அருணந்தி அடிகளாரும்
விதவிதமாய்க் குமரகுரு பரனிதழை
வியந்திடவே அணிசெய்யும் பிள்ளைதாமும்
மதிநலமும், பிறநலமும் அமையப்பெற்றே.
முருகனருள் உற்றவர்கள் வாழ்வாரே! 3

"வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்"

வெண்பாவூர், பே. திருஞானம்.

ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம்

உ

சிவமயம்

திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 13 | பிலவ-ஆடு தைத் திங்கள் 1-ம்வ [14-1-62] | இதழ் 1

# "குமரகுருபரன்" பதின்மூன்றாவது ஆண்டு மலர்

## தோற்றுவாய்

"பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்" —குமரகுருபரர்.

'குமரகுருபரன்' பன்னிரண்டு ஆண்டுகள் சீரும் சிறப்பும் பெற்று வளர்ந்து, இன்று பதின்மூன்றாம் அகவையினை எய்துகின்றான். இளமையும் வனப்பும் மிகுந்து அறிவொளி திகழும் அவன் முகம் யாவரையும் எளிதில் கவரும் என்பதில் ஐயமில்லை. அன்றலர்ந்த செந்தாமரை யொத்து அவன் தோன்றும் இந்நாள், வாசகர்கள் எல்லோரும் பேருவகையடையும் பொன்னாள்.

'குமரகுருபரன்', தன் தோற்றத்துக்கும் வளர்ச்சிக்கும் காரணமான திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் திருக்கண் நோக்கப் பேருதவியால் எல்லா நலமும் பெற்றுத் திகழ்வதும், சிறந்ததோர் அறத்தொண்டாற்றி வருவதும் தமிழுலகும் சைவ உலகும் எண்ணி இன்புறுதற் குரியனவாகும்.

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் தமிழ் மொழியையும், சைவ சமயத்தையும் காசிமுதல் குமரிவரை பரப்ப எடுத்துக் கொண்ட முயற்சிகள் யாவருக்கும் தெரியும். அவர் அருளிச் செய்துள்ள நூல்கள் யாவற்றிலும் தமிழ் மணமும் சிவமணமும் கமழும். அவற்றைப் பயில்வோர் தமிழ்ப் புலமையும், சிவனடிப் பற்றும் மிக்குத் திகழ்வர். இவை கற்போர் உள்ளங்களில் பூத்துக் காய்த்துப் பழுத்துப் பயன்தரக் காசி மடத்தின் மூல முதல்வராகிய ஆதிகுமரகுருபர சுவாமிகளின் திருப்பெயர் தாங்கிக் "குமரகுருபரன்" திங்கள் இதழ் தொடர்ந்து வெளிவரத் திருவுளங் கொண்டு அறக்கொடை நல்கி அருள்பாலித்துவரும் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் பொன்னார் திருவடிகளில் பதின்மூன்றுவது ஆண்டுமலரை அன்புக் காணிக்கையாகச் சமர்ப்பித்து மகிழ்கின்றேன்.

பலரையும் திடீர் திடீரென வியப்பில் ஆழ்த்தும் ஆற்றலுடையன, ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் பேரறச் செயல்கள். உள்ளம் கவர்கள்வனுய் மறைய நின்றும், இலன் என்னும் எவ்வம் உரையாமை ஈந்தும், அற்றார் அழிபசி தீர்த்தும், தமிழையும் சைவத்தையும் நம் நாட்டின் உடலும் உயிரும் என வளர்த்தும், இவ்விரண்டும் ஒன்றை ஒன்று இன்றியமையாதிருப்பதை எல்லோருக்கும் இனிது எடுத்து மொழிந்தும், உயிர்த்தொண்டும் சிவத்தொண்டும் ஒருங்கே ஆற்றியும், இவற்றுக்கு உறுதுணையாக யாண்டும் நின்று நிலவுமாறு "குமரகுருபரனைத்" தோற்றுவித்தும், பேணி வளர்த்தும், மேலும் மேலும் இனிதே நடப்பதற்கான ஊக்கமும் ஆக்கமும், அருளும் பொருளும், வரையாது வழங்கியும், நெறிமுறைகளினின்றும் வழுவாதிருக்க எவர் மனமும் நோகாத முறையில் இன்சொல்லால் உறுதியும் தெளிவும் வாய்ந்த அறிவுரைகள் இயம்பியும்,

இப்புண்ணியப் பெருந்தொண்டில் அடியேனையும் ஈடுபடுத்தித் தடுத்தாட் கொண்டருளும் தவப்பெருங் குருமூர்த்தி ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள் நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் திருவடி மலர்களில் தெண்டனிட்டு வணங்கி வழிவழித் தொண்டு பூண்டொழுகும் வாய்ப்பினை அருளும் கருணைக்கு மனமொழி மெய்களால் வணக்கத்தையும் நன்றியையும் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களின் அன்பும் அருளும் துணைநின்று வழிகாட்ட இப் பதின்முன்றும் ஆண்டில், "குமரகுருபரன்" மிக்க வலிமையும் ஆற்றலும் கொண்டு பொதுநலப் பணிபுரிவான் என்பது திண்ணம்.

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிச் செய்துள்ள நூல்களுள், சிதம்பரச் செய்யுட் கோவைக்குப் பொருள் விளக்கக் கட்டுரைகள் எழுதி உயர்ந்த பணியாற்றி வருபவர் தஞ்சாவூர் முத்து, சு. மாணிக்க வாசக அடிகள் ஆவார்கள். வழக்கம் போல் அவர்கள் கட்டுரைகள் இவ்வாண்டிலும் தொடர்ந்து வெளிவரும். **Hymns of the Tamil Saivite Saints** என்ற நூலில் உள்ள திருமுறைப் பாடல்களும், ஆங்கில மொழி பெயர்ப்பும் தொடர்ந்து வெளியிடப் பெறும். தேவகோட்டை சித்தாந்தப் புலவர் மாமணி, பாலகவி, வயிநாகரம் திரு. வே. இராம நாதன் செட்டியார் அவர்கள், மதுரைக் கலம்பக உரைநடையைத் தொடர்ந்து எழுதி வருகிறார்கள். மேலும் சமய, இலக்கிய, நுண் பொருள் ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதிவரும் திருப்பனந்தாள் செந் தமிழ்க் கல்லூரி முதல்வர், சிவநெறிச்செல்வர், திரு. கே. எம். வேங்கட ராமையா அவர்கள், திருமுறைச் செம்மல், வித்துவான், திரு. தா. ம. வெள்ளைவாரணம் அவர்கள், தென்காசி, திரு. சண்முகநயினர் பிள்ளை அவர்கள், சென்னை, மயிலாப்பூர், ஸ்ரீராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந் தவரும், "ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்" பத்திரிகையின் ஆசிரியருமான ஸ்ரீலஸ்ரீ பரமாத்மாநந்த சுவாமிகள் அவர்கள், சென்னை, திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள், தஞ்சைத் தமிழ் விரிவுரையாளர் திரு. மது. ச. விமலானந்தம் அவர்கள், சென்னை வித்துவான், திருமதி. விஜயசரசுவதி அம்மையார் ஆகிய பேரறிஞர்களும், மற்றும் பற்பல ஆசிரியர்களும் எழுதியுள்ள எழுத்தோவியங்கள் "குமரகுருபரனில்" இடம் பெறுகின்றன.

நுண் மாண் நுழைபுலம் செறிந்த கட்டுரைகளையும், ஆராய்ச்சி யுரைகளையும், கவிதைகளையும், மக்கள் நலனும், தமிழார்வமும், சமயப்

பற்றும் 'அடிப்படையாகக் கொண்டு எழுதி உதவி வரும் எல்லா அன்பர்களுக்கும்' எம்நன்றி என்றென்றும் உரியதாகும். "குமர குருபரன்" செப்பமான முறையில் திங்கள் தோறும் வெளிவருவதற்கு அவ்வப்போது உதவி வரும், ஸ்ரீவைகுண்டம் – அருள்நந்தி நகர் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆர்ட்ஸ் காலேஜ் தமிழ்விரிவுரையாளர் திரு. போ. முத்தரசு அவர்களுக்கும், " குமரகுருபரன் " வளர்ச்சிக்காக அயராது உழைக்கும் ஆசிரியர் குழுவினர்க்கும், உரிய காலத்தில் அச்சுப்பணியை நிறைவு செய்தும், இதழ்களைக் குறித்த காலத்தில் அனுப்பியும் உதவிவரும் அச்சகப் பணியாளர்களுக்கும், கலைக்கோயிற் சிப்பந்திகளுக்கும் நம் நன்றி உரியது.

திருச்செந்திலாண்டவன் துணை முன்னிற்க.
தமிழும் சைவமும் தழைத்தினி தோங்குக.
குமரகுருபரன் வளர்க.

ஸ்ரீவைகுண்டம்,
14—1—62.

இங்ஙனம்,
T. M. குமரகுருபரன் பிள்ளை B. A., B. L.
நிர்வாக ஆசிரியர்.

# பொங்கல் வாழ்த்து

**திரு. பொ. முத்தரசு, M. A., B. T.,**
தமிழ் விரிவுரையாளர்,
ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆர்ட்ஸ் காலேஜ்,
அருள்நந்தி நகர் – ஸ்ரீவைகுண்டம்.

பொங்கல் நாளே புவியெலா மகிழச்
செங்கதிர் திரும்பிப் பொங்கொளி பரப்ப
யாவும் புதுமை எழிலொடு மிளிர
ஓவா உழைப்பின் உறுபயன் சேர்த்த
கன்னலும் மஞ்சளும் கறிகாய் வகைகளும்
பன்னருஞ் சுவையுடைப் பல்வகைக் கனிகளும்
முன்றிலிற் பரப்பி முழுமுதல் இறைவனை
நன்றி உணர்வொடு நானிலம் வாழப்
புதுநெல் அடிசில் பொங்கிப் படைத்துப்
புதுவளம் கொழிக்கப் போற்றிப் பணிந்து
திருவிளக் கேற்றித் தீந்தமிழ் பாடிப்
பெருவிழா எடுக்கும் பெட்புடைத் திருநாள்;
இந்நாள்,
எங்கணும் பொங்கல் இனிது பொங்குக!
மங்கலம் சிறக்க! மனையறம் செழிக்க!
தொழிலும் அறிவும் துறைதொறும் ஓங்குக!
செழுந்தமிழ் வளர்க! திருநெறி மலர்க!
அருள்வழி நிற்பவர் ஆட்சியில் அமர்க!
குருபரன் அருள்தரு குமர குருபரன்
நவில்தொறும் நயந்திகழ் நற்றமிழ் வளர்த்து
நாளும் நமதுளம் களிக்க
நீளும் புகழொடு வாழிய நெடிதே!.

# சிதம்பரச் செய்யுட் கோவை

மாணிக்கவாசக அடிகள்
137, வடக்குராஜ வீதி, தஞ்சை.

[ கட்டுரை 53 ]

— தரவு —

தொல்லுலகம் படுசுடிகைச் சுடர்மணி விளக்கேந்தும்
பல்பொறிய படவரவு மடுபுலியும் பணிசெய்ய
அந்தரதுந் துபிமுழங்க வமரர்மலர் மழைசிந்த
இந்திரனு மலரவனுங் கரியவனு மேத்தெடுப்பச்
சூடகத் தளிர்ச்செங்கைத் துணைவிதுணைக் கண்களிப்ப
ஆடகத் திருமன்றத் தனவரத நடஞ்செய்வோய்.

— தாழிசை —

முன்மலையுங் கொலைமடங்க லீருரியு மும்மதத்த
வன்மலையுங் கடமலையின் முடையுடலின் வன்றோலும்
பொன்மலையின் வெண்முகிலுங் கருமுகிலும் போர்த்தென்ன
வின்மலையும் புயமலையின் புறமலைய விசித்தனையே. 1

கடநாக மெட்டும்விடங் கானாக மோரெட்டும்
தடநாக மவையெட்டுந் தரித்துளபூந் துகிலொன்றும்
உடனாக வடல்புரியுங் கொடுவரியி னுடுப்பொன்றும்
அடனாக வரவல்குற் கணிகலையா வசைத்தனையே. 2

வருநீலப் புயன்மலர மலரிதழிக் கண்ணியையும்
அருநீல முயற்களங்க மகன்றமதிக் கண்ணியையும்
கருநீலக் கண்ணியுமை செங்கைவரு கங்கையெனும்
திருநீலக் கண்ணியையுஞ் செஞ்சடைமேற் செறித்தனையே. 3

— அராகம் —

கறைவிட முகவெரி கனல்விழி யொடுமிளிர்
பிறையெயி றெருடுமிடல் பெறுபக டொடுமடல்
எறுழ்வலி யொடுமுரு மிடியென வருமொரு
மறலிய துயிர்கொள மலர்தரு கழலினை. 1

உலகமொ டுயிர்களு முலைதர வலம்வரும்
மலர்மகள் கொழுநனு மகபதி முதலிய
புலவரு மடிகளொர் புகலென முறையிட
அலைகடல் விடமுன மமுதுசெய் தருளினை. 2

விசையிலெ மிறைவியும் வெருவர விரசத
அசலம தசைதர வடல்புரி தசமுக
நிசிசரன் மணிமுடி நெறுநெறு நெறுவென
வசையில்பொன் மலரடி மணிவிர னிறுவினை. 3

இலவிதழ் மதிநுத லிரதியொ டிரதம
துலைவற நடவிடு மொருவனும் வெருவர
அலைகட னெடுமுர சதிர்தர வெதிர்தரு
சிலைமத னனையடல் செயுநுதல் விழியினை. 4

— ஈரடி அம்போதரங்கம் —

அருவமு முருவமு மாகி நின்றுமவ்
வருவமு முருவமு மகன்று நின்றனை.
சொல்லொடு பொருளுமாய்த் தோன்றி நின்றுமச்
சொல்லையும் பொருளையுந் துறந்து நின்றனை.

— ஓரடி அம்போதரங்கம் —

அந்நலம் விழைந்தவர்க் கறமு மாயினை.
பொன்னலம் விழைந்தவர் பொருளு மாயினை.
இன்னலம் விழைந்தவர்க் கின்பு மாயினை.
மெய்ந்நலம் விழைந்தவர் வீடு மாயினை.

— முச்சீரோரடி அம்போதரங்கம் —

முத்தொழிலின் வினைமுத னீ. மூவர்க்கு முழுமுத னீ.
எத்தொழிலு மிறந்தோய் நீ. இறவாத தொழிலினை நீ.
இருவிசும்பின் மேயோய் நீ. எழின்மலரின் மிசையோய் நீ.
அரவணையிற் றுயின்றோய் நீ. ஆலின்கீ ழமர்ந்தோய் நீ.

— இரு சீரோரடி அம்போதரங்கம் —

பெரியை நீ. சிறியை நீ. பெண்ணு நீ. ஆணு நீ.
அரியை நீ. எளியை நீ. அறமு நீ. மறமு நீ.
விண்ணு நீ. மண்ணு நீ. வித்து நீ. விளைவு நீ.
பண்ணு நீ. பயனு நீ. பகையு நீ. உறவு நீ.

எனவாங்கு

— சுரிதகம் —

கற்பனை கழன்றநின் பொற்கழ லிறைஞ்சுதும்
வெண்மதிக் கடவுண் மீமிசைத் தவழ்தரத்
தண்முகிற் குலங்க டாழ்வுறப் படிதலிற்
செங்கா லன்னமும் வெண்மருப் பேனமும்
கீழமே றுருவ வாரழற் பிழம்பாய்
நின்றநின் றன்மையை யுணர்த்தும்
பொன்றிகழ் புலியூர் மன்றுகிழ வோனே.

தில்லையிலே சிதம்பரத்திலே பொன்மன்றிலே எப்பொழுதும் திருக்கூத்தாடும் முழுமுதற்பொருள், பாம்புக்கால் முனிவரும் புலிக்கால் முனிவரும் பணிசெய்யவும், ஆகாசதுந்துபி முழங்கவும், தேவர் பூமாரி சொரியவும், இந்திரனும் செந்தாமரையானும், மாயனும் எடுத்தேத்தவும், சிவகாமியம்மையார் திருவிழி இரண்டும் கண்டு களிப்புறவும் அத்திருக்கூத்தினை இயற்றுகின்றது. இது இப்பாடலில் முதல் உறுப்பான தரவிற் கூறப்படும் பொருள்.

[ஆதிசேடன் உலகத்தைத்தாங்குதலின், அவன் தலையுச்சியைத் 'தொல்லுலகம் படுசுடிகை' என்றும் அத்தலையில் உள்ள

ஒளிவீசும் மணியைச் 'சுடிகைச்சுடர்மணி' என்றும் அப்பாம்பின் படத்தில் அம்மணி விளங்குதலின், 'சுடர்மணி விளக்கு ஏந்தும் படம்' என்றும், அப்படத்தில் பலபுள்ளிகள் இருத்தலால், 'ப[illegible] பொறிய படம்' என்றும் ஆசிரியர் விளக்கினர். அடுபுலி—'வியாக்கிர பாதர்'. சூடகம்-கைவளை. துணைவி—சிவகாமியம்மை யார். துணைக்கண்—இருவிழி. அனவரதம்-எப்பொழுதும்]

சிங்கத்துரியைப் போர்த்தவன் சிவபிரான். "தங்கிய மாத வத்தின் தழல்வேள்வியின் நின்று எழுந்த சிங்கமும் நீள்புலியும் செழுமால் கரியோடு அலறப் பொங்கிய போர் புரிந்து பிளந்து ஈருரி போர்த்ததென்னே" (7. 90. 6). 'சிங்கத்துரி மூடுதிர் தேவர் கணம் தொழ நிற்றிர் பெற்றம் உகந்து ஏறிடுதிர்' (7. 2. 7) என்று திருப்பாட்டில் ஆளுடையநம்பி அருளியவற்றை இங்கு நோக்குக. இதில் யானைத் தோலையும் கூறியதறிக. சிங்கத் தோல் வெண்மேகம் போலும், யானைத்தோல் கருமேகம் போலும். சிவபிரான் திருத்தோளில் மேரு வில் விளங்குகின்றது. முன்மலைதல் - முன் எதிர்த்தல். மடங்கல் - சிங்கம்; பிடரிமயிர் முதலியவற்றின் மடங்கலும் எதிர்த்தவுயிர்களெல்லாம் தன்பால் மடங்கலும் ஆகிய காரணத்தால் உற்ற பெயர். ஈர்உரி - ஈர்ந் தோல். உரித்ததோல் - உரி. ஈரமுடையதோல் - ஈர்ந்தோல். மும்மதத்தவன் - விநாயகன். அவன் மலையும் யானை. அது மதயானை. மலைபோலும் தோற்றம் உடையயானை. மும்மதத்தை யுடைய வலிய பொருதல் செய்யும் யானை எனல் சிறவாது. கடம் - மதம். மலை - யானைக்கு உவமையாகுபெயர். முடையுட லின் வல்தோல். உடலுக்கு முடைநாற்றம் இயல்பு. அத் தோலுக்கு வன்மையும் இயல்பு. பொன்மலை - சிவபெருமான் 'பொன்னர் மேனியன்'. அப்பொன்மலைமேல் முறையே வெண் முகிலும் கருமுகிலும் படிந்தாற் போலச் செம்மேனி பெம்மான் (திருமேனி) மேல் சிங்கத்தின் தோலும் யானையின் தோலும் விளங்குகின்றன. புறத்தே அலையக் கட்டினன். எட்டுத்திசை யிலும் யானைகளும் பாம்புகளும் மலைகளும் எட்டுஎட்டு ஆகத் தாங்குகின்றன என்பது தொன்மையாய் நிலவும் உண்மை. கடநாகம் - யானை. கடம் - மதம். விடம் - விஷம்; நஞ்சு. கால் - கக்கும். நாகம் - பாம்பு. தடநாகம் - பரந்த மலைகள்.

அஷ்ட திக்கஜம்-அஷ்டநாகம், அஷ்டகுலாசலம், திக்கே ஆடை சிவபிரானுக்கு, அதனால் அவனைத் 'திகம்பரன்' என்றனர்.

[ஆடையில்லாதா (அமண)ரைத் 'திகம்பரர்' என்றலும் வெள்ளுடையுடுத்தாரைச் சுவேதாம்பரர் என்றலும் உண்டு. சிவபிரானைத் திகம்பரருபத்தில் வணங்குவோர் முன்னோர், பின்னோர் வெள்ளுடை தரித்த திருக்கோலத்தில் வழிபடுவோர். அன்னோர் கதியும் சிவகதியே. உண்மைக் கொள்கை இது. காலபேதத்தில் கருத்து வேற்றுமை தோன்றிற்று.]

கொடுவரி - புலி. உடுப்பு - உடை. அடல் - வலிமை. நாகஅரவு - நாகப்பாம்பு. அரவு அல்குல் - பாம்பைப் போன்ற பின்புறம். அல்குல் இருபாலார்க்கும் பொது. அதனால் தான் இருவர்க்கும் பொருந்துஞ் சிலேடை அமையப் "பைவாய்ப் பொறியரவல்குல் எந்தாய் என்று பாடுதுமே" என்று பாடிய பகுதி இக்கோவை நூலில் (73) பின்வருதல் காண்க. 'மார்பும் அல்குலும் மனத்தொடுபரியை' (பரிபாடல் 13:-54) என்று திருமாலைக் குறித்துக் கூறப்பட்டமை, நம் தமிழ்த் தெய்வத்தின் பதிப்புட் காணப்படுகின்றது. அவ்வல்குற்கு அணியும் கலை பூந்துகில். திகம்பரமே சிவன் உடுக்கும் அம்பரம் (-கலை, ஆடை), அசைத்தல் - கட்டுதல், உடுத்தல்.

நீலநிறம் உற்ற மேகம் வெளிப்பட்டால் கொன்றைபூக்கும். அக்கொன்றைப் பூக்களால் ஆக்கிய கண்ணியையும் மாதர்ப் பிறைக்கண்ணியையும் கங்காதேவியாகிய திருநீலக் கண்ணியையும் திருச்சடைமேற் செறித்தவன் சிவன். 'கண்ணிகார் நறுங்கொன்றை காமர் வண்ண மார்பின் தாரும் கொன்றை' என்பது புறநானூற்றுக் கடவுள் வாழ்த்து. கண்ணி - தலைமாலை, காம்பு ஒருபாலும் பூ ஒருபாலுமாக வைத்துக் கட்டும் தனிமலர் மாலை 'கண்ணி' எனப்படும்.

நீலமேகம் மலர மலர்வது கொன்றை. திங்கட்பிறைக்கு உள்ளமாசு முயல் எனப்படும். கங்காதேவி உமாதேவியாரது திருக்கையில் தோன்றியவள். அதைக், 'கருநீலக்கண்ணியுமை செங்கைவரு கங்கை' என்றார் ஆசிரியர்.

நடஞ்செய்வோனே, விசித்தனை, அசைத்தனை, செறித்தனை என்று அமையும் ஆற்றை அறிந்து கொள்க. தாழிசை மூன்றனுள் முதலதில் 'மலை', என்ற சொல்லும், அடுத்ததில் 'நாகம் என்ற சொல்லும் சொற்பொருட் பின்வருநிலையும் சொற் பின்வரு நிலையும் ஆய்நின்றன. மூன்ருவதில் 'நீலம்' அங்கனம் நின்றது. 'மலை' என்று சொற்புணர்ச்சியால் தோன்ற வைத்த இடம் ஒன்றே. அது, 'புறம் அலைய விசித்தனையே' என்ற தொடரில், 'புறமலை' எனத் தோன்றுவதாகும்.

கங்காதேவியைக் கருங்குவளைக் கண்ணி ('திருநீலக் கண்ணி') என்ருர். சிவபிரான் சடைமேல் உள்ள பிறைக்கு மட்டும் 'முயல்' எனப்படும் களங்கம் இல்லை. அதனுல், 'அரு நீல முயற் களங்கம் அகன்ற மதிக்கண்ணி' எனப்பட்டது.

இவ்வளவும் இரண்டாவது உறுப்பாம் மூன்று தாழிசைக்கும் எழுதிய குறிப்பாகும். இனி மூன்ருவது உறுப்பாம் நான்கு அராகத்தையும் அறிவாம்.

மார்க்கண்டேய முனிவரது உயிரைக் கொள்ள இயமன் வருகின்ருன். அவன் கண்கள் சிவந்துள்ளன. அவை எரி கனல்வன. நஞ்சைக் கக்குவன. அவன் பற்கள் பிறைபோல் வன. அவன் ஏறிவருவது வன்பகடு (–எருமைக்கடா). அவனே மிக்க வலிமை உடையவன். அவன் வரும்போது உண்டாக்கும் ஓசை இடியேற்றின் ஓசையை ஒத்தது. அத்தகைய வரவினை யுடைய இயமனது உயிர் இறைவனது திருவடி யுதைக்கு உண வாயிற்று.

பாற்கடலைக் கடைந்த காலத்தில் அங்கிருந்து எழுந்த நஞ்சு தேவரெல்லாரையும் கொல்லும் நிலையில் இருந்தது. அவர் எல்லாரும் அத்துன்பத்தினின்றும் உய்திபெறச் சிவபிரானையே புகல் அடைந்தனர். முறையிட்டனர். இறைவன் அம்முறை யீட்டிற்குத் திருவுள்ளம் இரங்கி இசைந்தான். அக் கொடிய நஞ்சை மிசைந்தான்.

இராவணன் திருக்கயிலை மலையைத் தூக்கினுன். அதைத் தூக்கிய விசையில் அம்மைக்கு நடுக்கம் உற்றது. மலை

அசைந்தது. மலைமேல் வீற்றிருந்த அம்மையின் நிலையும் அசைந்தது. அவனுடைய பத்து முடி (மணி)களும் நெறு நெறு நெறு என அடர்த்திடப் பட்டன. இவ்வளவு நிகழ்ச்சிக்கும் இறைவன் பெரிய பராக்கிரமத்தைக் காட்டினான் அல்லன். தன் காற் பெருவிரல் ஆகிய ஒரு திருவுறுப்பின் முனையை ஊன்றிய தொன்றே அம் முழுமுதல்வன் காட்டிய வன்மை.

இரதிதேவி இலவம்பூப் போலும் இதழினாள். பிறைபோலும் நுதலினாள். தென்றலைத் தேராக உடைய கருவேள் (மன்மதன்) அவளொடும் தன் தேர்ப்பாகனாகிய வசந்தனொடும் நடுங்கச், சிவபிரான் நெற்றித் திருக்கண்ணால் வெற்றி கொண்டான்.

இனி நால்வேறு அம்போதரங்கம் ஆகிய உறுப்பின் பொருளை உணர்வோம்.

சிவபிரான் அருவும் அருவுருவும் உடையவனாகி உயிர்களை ஆட்கொண்டருள்வான். அருளினாலும், அவனுக்கு அம் மூவடிவும் இயல்பல்ல. அவனது இயல்பானவுருவம். சிவஞான ரூபமே. அவன் சொல்லுமாவான். சொற்பொருளும் ஆவான். ஆயினும் சொல்லுக்கும் அச் சொற்பொருளுக்கும் எட்டாத இறைவன் அவன்.

துறவற நலம் விரும்பியவர்க்குக் கல்லால் நிழலில் இருந்து அறங்களை உபதேசம் புரிந்த தென்முகப் பரமன். இல்லற நலம் விரும்பியவர்க்கு அதனால் எய்தும் இன்பமும் ஆவான். வீடு வேண்டினார்க்குப் பேரின்பமும் ஆவான்.

'பந்தமும் போகமும் ஆயினர்' என்பது திருவாசகம். சிவ பிரானது ஐந்தொழில்களும் கட்டு வீடு என்னும் இருதொழிலுள் அடங்கும். அக் 'கட்டு' என்னுந் தொழில் ஒன்றே 'படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல்' என நான்காயிற்று. இதைத் திருக்கோவையாருரைப் பாயிரமாகிய ஒரு திருவகலாலும் அறியலாம்.

அத் தொழில் எல்லாவற்றிற்கும் கருத்தன் சிவபிரானே. அதனால் அம் முத்தொழில் வல்ல கருத்தர் மூவர்க்கும் கருத்தனாகி முழு முதலாவன் அவன். இத்தொழில் எல்லாம் செய்தாலும்

அவன் ஒரு தொழிலும் இல்லாதவனே. வினைத் துடக்கு உருத வனே ஆவன். நஞ்சுண்டும் சாவாத அவனொருவனே மூவாச் சாவாப் பிறவா முதல்வன். இந்திரனுக்கும் பிரமனுக்கும் மாய னுக்கும் உயிராய் விளங்கும் இறைவனும் அவனே. அவர்பால் தங்காதவனேல் இறைவன் என்னும் பெயர்க்கு உரிமை யிராது. அவனே தென்முகக் கடவுள். கல்லாலின் கீழ்புடையிருந்து நான்மறை ஆறங்க முதல் சொல்லாமற் சொல்லி உணர்வித் தருள்பவன்.

அவன் பெரியனும் சிறியனும், பெண்ணும் ஆணும், அரிய னும் எளியனும், அறமும் மறமும், விண்ணும் மண்ணும், வித்தும் விளைவும் பண்ணும் பயனும், பகையும் உறவும் ஆவன். ஆயினும் அத்துவந்துவங்கள் அவனுக்கு இயல்பாவன அல்ல. இவ்வாறு உள்ளபடி சொல்லி அவன் திருவடியை வணங்குவது எல்லா உயிர்க்கும் உரிய கடனாகும். அத்திருவடி கற்பனை கடந்த சோதியும் கருணையே உருவுமானது. ஒவ்வோர் உயிர்க்கும் உள் நின்று அவன் திருக்கூத்தாடுகின்றான். அதை 'யார்க்கும் அண்மையதாய் அம்பலத்துள் ஆடியருள் பேரொளி' என்றும் 'இந்தமா நிலத்தே மனித்தப் பிறவியும் வேண்டுவதே' என்றும் அணியதாகக் கூறப்பட்ட சிதம்பரத்திலும் தரிசிக்கும் பேறு உயிர்கட்கு உண்டு. அப்புலியூர்ப் பொன்மன்றம், சந்திர மண்டலம் மேலே தவழவும் மேகமண்டலம் கீழே படியவும், செவ்வொளியதாய்த் திகழ்கின்றது. அத்தோற்றம் செங்கா லன்னப்பறவையும் (பிரமனும்) வெண்கொம்பு உடைய பன்றி யும் (மாயனும்) மாறி மேலும் கீழும் தேடத் தீப்பிழம்பாய் நின்ற பரமசிவனது இயல்பை உணர்த்துகின்றது. அவன் திருவடி யைத் தொழுது நாமும் பேரின்பக் கடலுள் முழுகித் திளைப் போம்.

[தொடரும்]

# ஐமுகப் பரமனும் அறுமுகக் குமரனும்

தருமபுர ஆதீன வித்துவான்,
"திருவண்ணமலை ஆதீனவிரிவுரையரசு, மதுரை ஆதீனச் சித்தாந்த
சைவ வித்தகர், சித்தாந்தப் புலவர்மாமணி, பாலகவி"
வயிநாகரம், திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
தேவகோட்டை.

பரம் பொருளாகிய சிவபெருமான் ஐந்து திருமுகங்களை உடையவர். அவரது திருமகனாராகிய குமரப் பெருமான் ஆறு திருமுகங்களை உடையவர். சிவபெருமானைத் "தந்தை" என்றும் முருகப் பெருமானை "மைந்தர்" என்றும் புராணங்கள் பேசுகின்றன. தந்தையும் மைந்தருமாகக் குறிக்கப் பெறுவதால் சிவபெருமானின் வேறானவர் குமரப் பெருமானென்று கூறுவது பொருந்தாது.

உலகியலில் மகப்பேற்றுக்கு வித்தாயிருப்பது தந்தையின் விந்து என்பதை நாமறிவோம். தந்தையின் விந்து விதையாகவும் தாயின் நாதம் நிலமாகவும் இருந்துதவுவதனாலேயே மகப்பேறாகிய விளைவு கிட்டுகிறது. இதனாலேயே "தந்தை மகனாகிறான்" என்று வேதமும் முழங்கும். உருவத்தால் தந்தையிலிருந்து இரண்டாவ தவனாகக் காணப்பெறும் மைந்தன், மற்ற எல்லாவற்றாலும் தந்தையோடு ஒன்றானவனே என்பதைத் தமிழ் நாட்டுப் பழமொழியாகிய "தந்தை எப்படி தனயனப்படி" என்பதனால் அறியலாம். "மகனறிவு தந்தையறிவு" முதலிய வேறு சில முதுமொழிகளும் இந்தக் கருத்தை ஒட்டி வழங்கி வருவனவேயாம்.

உடம்பும் உயிருமாகிய இரண்டும் எல்லாவற்றிலும் ஒன்றியிருக்கின்ற ஒற்றுமை நயத்தால் ஒன்றாகக் காணப் பெற்றாலும் இருபொருளாதற்றன்மையாகிய வேற்றுமை நயத்தால் இரண்டாக வைத்தே பேசப்பெறும். அது போலவே சிவபெருமானாகிய தந்தையும் குமரப் பெருமானாகிய மைந்தரும் தம்மின் வேறல்லாத ஒருவரேயாயினும் உருவத்தால் வேறாயிருக்கின்றமைபற்றி

இருவராகப் பேசப்பெறுவர். இவ்வுண்மையை "நீயே விநாயகன், நீயே குமரன்" என்னும் வேதச் சுருதியால் நன்கு உணரலாம்.

ஐந்து முகங்களையுடைய சிவபெருமானே, ஆறுமுகங்களை யுடைய குமரப் பெருமானாக வந்தானென்பதைக் கந்த புராணம் கந்தர்கலி வெண்பா முதலிய அருள் நூல்கள் தெளிவு பெற அறிவிக்கின்றன. காஞ்சிக் குமரகோட்டத்துப் பெருமானை முப்போதும் திருமேனி தீண்டி அர்ச்சிக்கும் முதன்மையாள ராகிய கச்சியப்பசிவாசாரியரிடம் அப்பெருமானே கனவில் தோன்றி வேண்டிப் பாடச் செய்தது கந்தபுராணம். சீவை குந்தத்தில் தோன்றிய குமரகுருபர சுவாமிகளுக்குத் திருச் செந்தூர்ச் சண்முக விலாசத்தில் நேரே தோன்றிக் காட்சி தந்து கந்தப் பெருமான் பாடச் செய்தது கந்தர்கலி வெண்பா. இவ்விரண்டு ஞான நூல்களையும் அடிப்படையாக வைத்து அறிபவர்களுக்கு ஐம்முகப் பரமனும் அறுமுகக் குமரனும் தம்மின் வேறல்லாத ஒருவரே என்பது நன்கு விளங்கும்.

தானவர் தலைவனாகிய சூரபன்மன் தவஞ்செய்து பெற்ற தனிவலிமையினால் செருக்குற்று வானவர் தலைவனாகிய இந்திரனையும் மற்றைத் தேவர்களையும் அளவு கடந்த துன்பத் தில் ஆழ்த்தினான். சூரனது ஆட்சியில் நல்லவர் தாழ்ந்தனர். அல்லவர் வாழ்ந்தனர். அல்லற்பட்ட தேவரனைவரும் ஐம்முகப் பரமனிடம் சென்று துன்பநீக்கமும் இன்ப ஆக்கமும் வேண்டி முறையிட்டனர். சூரபன்மனது பெருவாழ்வுக்கு வரமளித்தவர் சிவபெருமான். சிவபெருமானிடம் சூரபன்மன் கேட்ட வரங் களுள் "எந்நாளும் அழியாமல் இருக்கின்ற மேனியுமெற் கீதல் வேண்டும்" என்பதும் ஒன்று. இதற்குச் சிவபெருமான் "தேவர் யாவரும் சென்று தொழப்படு மூவராகி மொழிந்திடு நுங்களைத் தாவி லாதநஞ் சத்தியொன் றேயலால் ஏவர் வெல்பவர் என்று விளம்பி மேல்" என்றபடி சிவசத்தியொன் றாலன்றி மற்றெதனா லும் அழியாத வச்சிர தேகத்தைச் சூரபன்மனுக் கொடுத் தருளினார்.

தேவர்களது விண்ணப்பத்தைத் திருச்செவி சாத்தியருளிய சிவபெருமான் தானவர் குலம் அழியவும் வானவர் குலம்

வாழவும் வேண்டுமெனத் திருவுள்ளம் பற்றினர். சூரனுதியோரை அழிக்கத் தமது சத்தியொன்றே வல்லமையுடையதென்பதை உணர்ந்து தம்மின் வேறல்லாத அச்சத்தியை (ஆற்றல்) குமரப் பெருமானுகத் தோன்றும்படி அருள் பாலித்தார். குமரப் பெருமான் தோன்றுகிற வேளையில் சிவபெருமான் "அறிஞராயோர், சிந்திக்குந் தனது தொல்லைத் திருமுகம் ஆறுங் கொண்டான்" என்று கந்தபுராணம் தெரிவிக்கின்றது. இதனைக் கந்தர் கலிவெண்பா,

"பூங்கயிலை வெற்பிற் புனைமலர்ப்பூங் கோதையிடப்
பாங்குறையு முக்கட் பரஞ்சோதி - ஆங்கொருநாள்
வெந்தகுவர்க் காற்ருத விண்ணேர் முறைக்கிரங்கி
ஐந்து முகத்தோ டதோமுகமும் - தந்து
திருமுகங்க ளாருகி" என்று கூறுகின்றது.

சிவபெருமானுடைய் திருமுகங்கள் ஐந்தும் ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் என்னும் பெயருடையன. இவை ஐந்தும் முறையே உச்சி, கிழக்கு, தெற்கு, வடக்கு, மேற்கு ஆகிய திசைகளை நோக்கிக் கொண்டிருப்பன. இவற்ருேடு சிவசத்தி எனப்பெறும் இறைவனது ஆற்றலுக்குரிய முகம் கீழ் நோக்கியதாக அதோமுகம் என்னும் பெயருடன் விளங்கும். உயிர்களின் நலத்தில் ஈடுபாடுடைய கருணையாகிய சிவசத்தியின் திருமுகம் உயிர்களை நோக்குகின்ற கீழ்ப்பார்வை உடையதாகி அதோமுகமென அழைக்கப் பெறுகின்றது. சிவமும் அதன் சத்தியாகிய ஆற்றலும் ஒன்றினென்று பிரிப்பில்லாதன. அது போலவே ஒன்றினென்று முற்பிற்பாடாகிய தோற்றமில்லாதன. சிவம் என்று உண்டோ; அன்றே சத்தியும் உண்டு. அதனுலேயே "தனது தொல்லைத் திருமுகம் ஆறுங் கொண்டான்" என்று கச்சியப்பர் கூறுவாராயினர். சிவசக்திகளின் சேர்க்கைச் சிறப்பு, மெஞ்ஞானியராலேயே உணர்ந்து போற்றப்பெறுவது.

"சிவஞ்சத்தி தன்னை யீன்றுஞ் சத்திதான் சிவத்தை யீன்றும்
உவந்திரு வரும்பு ணர்ந்திங் குலகுயி ரெல்லா மீன்றும்
பவன்பிரம சாரியாகும் பான்மொழி கன்னி யாகும்
தவந்தரு ஞானத் தோர்க்கித் தன்மைதான் தெரியு மன்றே."

என்பது சிவஞான சித்தியார். இதனுலேயே "இறைவனது ஆறு திரு முகங்கள் அறிஞரால் சிந்திக்கப் பெறுவன" என்று கந்தபுராணம் உரைத்தது.

ஆறுமுகங் கொண்ட ஐந்து முகனின் நெற்றிக்கண்களி லிருந்து வெளிப்பட்ட தீப்பொறிகள் சரவணப் பொய்கையில் சண்முகக் கடவுளாகத் தோன்றின. சிவபெருமான் ஒருவனே பரமபதி. அவனையன்றி மற்ற அனைவரும் பசுக்கள். பசுக் களுக்கே உரிய பிறப்பும் இறப்பும், பதியாகிய அவனுக்கு எப்பொழுதுமே உண்டாவதில்லை. அவனது சிறப்பியல்புகள் வேதங்களாலும் அறியப் பெருதன. அளவைகள் எவையும் அவனை அளந்தறியப் பயன்படமாட்டா. எள்ளினுள் எண்ணெய் போல எங்கும் நிறைந்திருக்கின்ற அவன் இயல்பாகவே பாசங் களில் நீங்கியவன். அத்தகைய ஐம்முகச் சிவ பெருமானே ஆறுமுகக் குமரப் பெருமானுகச் சரவணப் பொய்கையில் எழுந் தருளி விற்றிருந்தான். இதனை,

"மறைகளின் முடிவால் வாக்கால் மனத்தினுல் அளக்கொ ணுமல்
நிறைவுடன் யாண்டு மாகி நின்றிடும் நிமல மூர்த்தி
அறுமுக வுருவாய்த் தோன்றி அருளொடு சரவ ணத்தின்
வெறிகமழ் கமலப் போதில் வீற்றிருந் தருளி னுனே."

என்று கந்த புராணம் அறிவிக்கின்றது.

சரவணத் துதித்த சண்முகப் பொருமானைத் தாயாகிய உமாதேவிக்குச் சிவபெருமான் அறிமுகப்படுத்துவதைக் கச்சி யப்ப சிவாசாரியர்,

"ஆதலி னமது சத்தி யறுமுகன் அவனும் யாமும்
பேதக மன்றுல் நம்போற் பிரிவிலன் யாண்டும் நின்ருன்
ஏதமில் குழவி போல்வான் யாவையும் உணர்ந்தான் சீரும்
போதமும் அழிவில் வீடும் போற்றினர்க் கருள வல்லான்."

என்னும் செய்யுளிற் கூறுகின்ருர்.

இதில் ஐம்முகப் பரமனுகிய சிவபெருமான் "தனது ஆற்றலே அறுமுகக் குமரப்பெருமான்" என்றும், அவனுக்கும் தனக்கும் வேறுபாடு இல்லை என்றும் "தன்னைப்போல அவனும்

எவற்றிலும் பிரிவில்லாதவனுகி எங்கும் நிறைந்தவன்'' என்றும் ''பார்ப்பதற்குக் குழந்தை போலக் காணப் பெறுபவன்'' என்றும் ''எவற்றையும் உணரும் பேரறிவுடையவன்'' என்றும் இம்மைப் போகங்களேயும் சிவஞானத்தையும், அதனுற் பெறத்தக்கதாகிய முத்திப் பேற்றையும் தன்னேப் போற்றுகின்ற மெய்யடியார் களுக்கு வழங்குவதில் வல்லமை யுடையவ''னென்றும் கூறி யருளியதிலிருந்து ஐந்து முகனும் ஆறுமுகனும் ஒருவனே யென் பது வெள்ளிடை மலேயென விளங்கும்.

திருவைந்தெழுத்தென்று பொதுவாகச் சொல்லப் பெறு கின்ற ஸ்ரீபஞ்சாட்சரம் உச்சரிக்கும் அதிகாரிகளின் பேதங்களே ஒட்டி, ஐந்து; நான்கு; ஆறு; எட்டு; இரண்டு ஆதிய எண்ணிக் கைகளேக் கொண்ட எழுத்துக்களே உடையதாகவும் இருக்கும். அங்ஙனம் எழுத்துக்களின் எண்ணிக்கை மிகுதியும், குறைவும், பெற்றிருத்தல் பற்றிச் சிறப்பாக ஆறெழுத்து - எட்டெழுத்து (ஷடாட்சரம் - அஷ்டாட்சரம்) என்பன போன்ற பெயர்களால் அவ்வம் மந்திரங்கள் குறிக்கப் பெற்ருலும் அவையனேத்தும் ஸ்ரீ பஞ்சாட்சரம் என்ற பொதுப் பெயருக்குரியனவேயாகும். திருவைந்தெழுத்து, பிரவணச் சேர்க்கையால் ஆறெழுத்துடைய தாக அமையும். இவ்வாறெழுத்துக்களே குமரப் பெருமானின் ஷடாட்சர மந்திரமாக ஆயினவென்றும் தமக்குரிய ஆறு திரு முகங்களே குமரப் பெருமானின் ஆறு திருமுகங்களாக ஆயின வென்றும் உமையம்மைக்கு உரைப்பார் போலச் சிவபெருமான் குமரநாயகனே நமக்கு எடுத்துக் காட்டுகின்ருர். இதனேக் கந்த புராணத்திலுள்ள,

''நன்முகம் இருமுன் றுண்டால் நமக்கவை தாமே கந்தன்
தன்முக மாகியுற்ற தாரகப் பிரம மாகி
முன்மொழி கின்ற நந்த மூவிரெண் டெழுத்து மொன்ருய்
உன்மக னுமத் தோரா றெழுத்தென உற்ற வன்றே''

என்ற திருப்பாடல் அறிவிக்கின்றது. ஆகவே குமரப் பெருமானே வணங்குவோர் சிவசத்திகளே ஒருசேர வணங்கிய பயனேப் பெற்று இன்புறுவாரென்பது தெளிவாகும்.

நலம் பெருகுக.

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 12, இதழ் 12-ன் தொடர்ச்சி]

## I

## SAMBANDAR

(Tamil: TIRU JNANA SAMBANDAMURTI SWAMI)

12 மந்திரமாவதுநீறுவானவர்மேலதுநீறு
சுந்தரமாவதுநீறுதுதிக்கப்படுவதுநீறு
தந்திரமாவதுநீறுசமயத்திலுள்ளதுநீறு
செந்துவர்வாயுமைபங்கன்றிருவாலவாயான்றிருநீறே.

White ash from burnt cow-dung must be worn by all true Saivites. Every day the worshipper, facing north-east and crying 'Siva, Siva,' must dip in the ash the fingers of his right hand and draw the three middle fingers from left to right along his forehead, so leaving three horizontal white lines. The ceremonial side of Saivism is so prominent that this one stanza must be given, a specimen of many extolling the virtues and potencies of the ash.

The Tantras are works inculcating ceremonies, also magic performances and mystic rites.

12 The sacred ash has mystic power,
'Tis worn by dwellers in the sky.
The ash bestows true loveliness.
Praise of the ash ascends on high.
The ash shows what the Tantras mean,
And true religion's essence tells,
The ash of Him of Alavay,
In whom red-lipped Uma dwells.

(To be Continued)

---

# காவொன்று கண்டேன்............!

புலவர், பனசை, திரு. சு. சடையப்பன் அவர்கள்,
(தமிழாசிரியர். கழகப் பெரும்பள்ளி, பெருந்துறை, கோவை.)

1. தேன்கூட்ட மாங்கே தேம்பலவின் சுளைநாடும்;
   மான்கூட்ட மாங்கே மருண்டோடி விளையாடும்;

2. வான்மேட்டை வளர்மரங்கள் வருடிவான் முட்டும்;
   தேன்கூட்டைத் தேர்கரடி, தீண்டித்தேன் சொட்டும்;

3. உண்ண இனிக்கின்ற ஊற்றுக்க ளாங்குண்டு;
   எண்ணத் தொலையாத ஏரியதன் பாங்குண்டு;

4. குயில்பாட மயிலாடக் காலெடுத்து வைக்கும்;
   ஒயிலாக வண்டங்கு ஒத்தூதி மொய்க்கும்;

5. பேடையின் ஊடலினைப் போக்கற்குக் கொக்கும்
   ஓடைக்கண் நிற்கும்; உணவெடுத்துக் கக்கும்;

6. அஞ்சுகமும் பூனையின் அருகில்வந் தஞ்சும்;
   இஞ்சியும் மஞ்சளும் இருநிலத்துக் கொஞ்சும்;

7. வான்வழியில் நடந்த வலிபோக்க மஞ்சும்
   தேன்பொழியும் ஓங்கலினைத் தேடிவந்து துஞ்சும்;

8. எல்லையில் கொல்லைக்கண் பல்லைப்போல் முல்லை
   இல்லாத இடமொன்று இல்லையங் கில்லை;

9. செந்நெல் முற்றிச் சிரிக்குமொலி கேட்டு
   தின்னவரும் புள்ளும் திரும்புங்கிலி போட்டு;

10. பச்சைப் படாஅத்தைப் பரப்பியது போலே
    இச்சைப் பசும்புல் இருந்தபுவி மேலே;

11. மதியாத மங்கையர் மதிமுகத்தைக் கண்டு
    விதிமாறி அல்லிபகல் விரிவதும் உண்டு;

12. கன்னலைப் பிடித்துக் களிறொடித்த சாறு
இன்னலைக் கெடுத்தங் கேறியோடு மாறு;

13. கானமரம் வான்மேனி, கைநீட்டிக் குத்தும்;
வானமங்கை வலியாலே வல்லிடியால் கத்தும்;

14. கத்திக்கண் ணிரதனைக் காட்டிடுமே கொண்டல்;
எத்திசையும் அதனாலே எழும்பிடுமே வண்டல்;

15. பண்பேசிக் கிள்ளை பறக்கும் வானத்து;
கண்பேசக் காதலர் களிப்பர் மோனத்து;

16. இப்படியோர் சோலையில் இனிதுலவச் சென்றேன்;
எப்படியான் சொல்வேன்? எனைமறந்து நின்றேன்;

17. புலியொன்று பாய்ந்ததனால் போக்கிடத்தைத் தேடிப்
பலியின்றித் தப்பநான் பாய்ந்தேனே ஓடி;

18. அந்நிலையில் கட்டிற்கீழ் அடிபட்டுக் கிடந்தேன்
இந்நிலைய கனவைவிட் டெழுந்தேயான் நடந்தேன்!

---

# முதலாம் விக்கிரமாதித்தனின் கத்வல் பட்டயங்கள்

திரு. K. M. வேங்கடராமையா அவர்கள் M. A.,
திருப்பனந்தாள்

## சளுக்கியரும் பல்லவரும்

தக்காணத்தில் ஆண்ட பழைய அரச பரம்பரையினருள் சளுக்கியர் சிறப்பிடம் பெறுவர். இம்மரபினர் வாதாபியைத் தலைநகராகக் கொண்டு அரசாண்டவர்; பெருவலியும் பெரு வீரமும் படைத்தவர். இவர்களுடைய கொடி சூகரம் அதாவது பன்றியாகும். இம்மரபினருள் முதலரசன் விசயாதித்தன் என்ப வனுவன். இவனும் இவனுக்குப் பின் ஆண்ட அரசர்களும், காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட பல்லவ அரசருடன் இடையருது போர் செய்தவராகவே காணப்பெறுகின்றனர். பல்லவ அரசருள் கி. பி. 615 முதல் ஆண்டவன் மகேந்திர வர்மன் எனப் பெறுவன். அவன் காலத்துச் சளுக்கிய அரசன் இரண்டாம் புலகேசி. இவன் கி. பி. 609 முதல் 642 வரை ஆண்டவன். இப்புலகேசி, மகேந்திரவர்ம பல்லவனுக்குத் தோற்று ஓடினும், பின்னர் இவன் மகன் நரசிம்மவர்மன் (கி. பி. 630 – 668) அரசு செய்த காலத்திலும் மீண்டும் படை யெடுத்து வந்து தோற்றுச் சென்றவன். இப்புலகேசி காலத்தில் தான் வாதாபி பல்லவ வீரர்களால் (ஏறத்தாழக் கி. பி. 640-ல்) அழிக்கப் பெற்றது. இப்புலகேசியின் மகன், விக்கிரமாதித்தன் I (655 – 680) எனப்பெறுவான். இவனும், நரசிம்மவர்ம பல்லவ அரச னுடைய பேரனுகிய பரமேசுவரவர்மன் (670 – 685) காலத்தில் பல்லவ நாட்டின் மேல் படையெடுத்துக் காவிரிக் கரை வரை யிலும் வந்தான்; உரகபுரம் என்னும் இடத்தில் பாடி விடு அமைத்துக் கொண்டான்.

## கத்வல் பட்டயம்: குறிப்பு

முதல் விக்கிரமாதித்தன் உரகபுரத்தில் இருந்த காலத்தில் கொடுக்கப் பெற்றவையே கத்வல் பட்டயங்கள். இவை மூன்று

செப்பேடுகள் கொண்டவை; விளிம்புகள் சிறிது உயர்ந்தவை; நீளம் 9 அங்குலம்; அகலம் நடுப்பகுதியில் $4\frac{1}{8}$"; இரண்டு முனைப் பகுதிகளும் $4\frac{1}{4}$". இம்மூன்று செப்பேடுகளும் $\frac{5}{8}$" கனமுள்ள $3\frac{1}{2}$" வளையத்தில் கோக்கப்பட்டவை. வளையத்தின் முனைகள் ஒரு அங்குலம் விட்டமுள்ள முத்திரையுடைய செம்பினுல் பிணிக்கப் பட்டுள்ளன. அம்முத்திரை பன்றி ஓடுவதுபோன்ற உருவத்தைத் தன்னகத்தே கொண்டது. முதல் ஏட்டிலும் இறுதி ஏட்டிலும் உட்புறத்தில் எழுதப்பட்டுள்ளன. இச்செப்பேடுகளின் எடை 160 தோலா.

## கிடைத்தமையும் ஆய்வும்

இச்செப்பேடுகள் ஒரு பள்ளி மாணவரிடம் இருந்தன. இவை ஐதராபாத் பகுதியில் கத்வல் என்ற அவன் ஊரில் அவன் வீட்டில் இருந்தன; வயல்களிலிருந்து இவை கிடைக்கப்பெற்றனவாம். இவற்றைக் கர்நூல் கலெக்டர் வழியாகப் பெற்று, ராவ் பகதூர் திரு.வெங்கையா அவர்கள் படியெடுத்துக்கொடுக்க, பேராசிரியர் E. Hultzsch, Ph. D. அவர்கள் ஏறத்தாழ 1909-ல் ஆய்ந்து Epigraphia Indica Volume X-ல் பக்கம் 100 – 106-ல் ஆய்வுரையும் ஆங்கில மொழி பெயர்ப்பும் தந்துள்ளனர். உல்ஷ் துரை எழுதிய ஆய்வுரையை ஒட்டியே இங்கு எழுதப் பெறுகின்றது. இச்செப்பேடுகளில் கண்ட மொழி சமஸ்கிருதம் - செய்யுளும் வசனமுமாம்.

## ஆங்கில வழி தமிழாக்கம்

(வரி 1) ஓம்ஸ்வஸ்தி (செய்யுள் 1) (வராகாவதாரத் தோத்திரப்பாடல்)

(வரி 5) அசுவமேதம் செய்தவனும் சளுக்கிய மரபினை அணிசெய்தவனும் ஆகிய புலகேசி வல்லப மகாராஜனுக்குப் ப்ரபவுத்திரனும்,

(வரி 6) வனவாசி முதலாகிய பகை மன்னருடைய நாடுகளைத் தன் பராக்கிரமத்தால் வென்று, தன் புகழ் நிறுவிய கீர்த்திவர்ம பிருதிவிவல்லப மகாராஜற்குப்பேரனும்,

(வரி 8) வடபுலத்துக்குத் தலைவனாகிய புகழ் பொருந்திய ஹர்ஷவர்த்தனரை வென்று பரமேசுவரன் என்ற விருதுபூண்ட சத்யாச்ரய ஸ்ரீ பிருதிவி வல்லவ மகாராஜாதிராஜ பரமேசுவரற்கு அன்பு மகனும் ஆகத் திகழ்ந்தவன்.

(வரி 10) இவன் பிறர் உதவியின்றி, சித்திரகண்ட என்ற தன் குதிரையின் மேலேறி, பகைமன்னருடைய இரத்தத்தைப் பருகுவதற்குரிய நாக்குப் போலத் திகழ்ந்த கூரிய ஒளி பொருந்திய வாளை, ஆதிசேடன் போல் உலகப்பொறை தாங்கும் தன் புயங்களில் ஏந்திப் பலபோர்களை நடத்திப் பல அரசர்களை வென்றவன்; விழுப்புண் பலவும் பெற்றவன்; மூவரால் தான் பெறமுடியாது போகவிருந்த அரசுரிமையைத் தனக்குரியதாக ஆக்கிக்கொண்டு, நாட்டைப் பாதுகாக்கும் பொறுப்பைத்தானே ஏற்றுக்கொண்டவன். பிராம்மணர்களுக்கும் கோயில்களுக்கும் முன்னர் உரியனவாய்ப் பின் மூவர் நாடுகளில் அடங்கிய சொத்துக்களை மீண்டும் பிராமணர்களுக்கும் கோயில்களுக்கும் உரியனவாகுமாறு உத்தரவிட்டவன்.

(செய்யுள் 2) (இவன் யார் எனின், இவன்) அநிவாரித விக்ரமாதித்யன்; பல பகுதிகளிலுள்ள பகைமன்னர்களுடன் போரிட்டுத் தன் வமிசத்தாருக்குரியனவாகிய அரசுரிமையை மீட்டுக்கொண்டு, பரமேசுவரன் என்ற விருதினைப் பூண்டவன்.

(வரி 17) அன்றியும்,

(செய்யுள் 3) ஸ்ரீ வல்லபன் நரசிம்மனுடைய பெருமையை அழித்தான்; மகேந்திரனுடைய வல்லமையை மறையச் செய்தான்; ஈசுவரனைத் தந்திரத்தால் அடக்கினான்.

(செய்யுள் 4) இவன் தென்னாடு என்னும் கன்னிப்பெண்ணை அவளுடைய ஒட்டியாணம் எனத்திகழும் காஞ்சியைக்கைப் பற்றி வலிதில் மணக்க முயன்று அவட்குக் கட்டில்(?) ஆகத் திகழ்ந்த பல்லவரை நசுக்கினான்.

(செய்யுள் 5) ரணரசிகனாகிய இவன் வலிமை பொருந்திய சிறந்த தோள்களையுடையனாய், மகாமல்லனுடைய வமிசத்தை அழித்து ராஜமல்லன் என்ற விருது பொருத்தமாகப் பூண்டான்.

(செய்யுள் 6) இவன்; ஈசுவர போதராஜாவை (போத்த ரசனை) வென்று, ஏறமுடியாத மதில்களை ஏறித், தகர்க்கமுடியாத மதில்களைத் தகர்த்துக், கடக்க முடியாததும் ஆழமானதுமான அகழியைக் கடந்து, தென்னாட்டின் ஒட்டியாணமாகத் திகழ்ந்த காஞ்சியைக் கைப்பற்றினான்.

(வரி 22) உலக வலய முழுவதையும் தன் போராற்றலால் "வென்றவனாகிய இந்த விக்ரமாதித்ய சத்யாச்ரய ஸ்ரீ ப்ரிதிவி வல்லப மகாராஜாதிராஜ பரமேசுவரன் எல்லாமக்கட்கும் உத்தர விடுவதாவது:-

(வரி 23) நீங்கள் அறிவீராகுக: சகரயாண்டு 596க்கு மேற் செல்லா நின்ற நம்முடைய வருஷவர்த்தனம் யாண்டு இருபதாவது நிகழுங்கால், நம்முடைய வெல்படையானது சோளிக விஷயத்தில் புகுந்து, காவிரித் தென்கரையில் உரக புரத்தில் பாடிவீடு கொண்டு தங்கியிருக்கையில், வைசாக நிறை மதிநாளில் சேடுல்லி என்ற ஊரில் அரச அளவுப்படி 50 நிவர்த்தனம் பரப்புள்ள வயலும், ஒரு கண்டுக நெல்லும், கங்கமஹாதேவியின் வேண்டுகோட்படி, காப்பியகோத்திரத்தவனும் ஈசுவர ஷடங்கவித் என்பவரின் பேரனும் சுவாமி சந்தசர்மனின் மகனும் ஆன கன்ஹசர்மனுக்கு நம்மாலளிக்கப்பெற்றது.

(வரி 28) அவ்வூரிலேயே வத்ஸ கோத்திரத்தவனும் மஹிஸரஸ்வரமின் என்பவரது பௌத்திரனும், தாதம்மஸ்வாமின் என்பாரது புத்திரனும் ஆன பாதம்மஸ்வாமின் என்பாருக்கு அரசாங்க அளவின்படி 50 நிவர்த்தனம் பரப்புள்ள வயல் அளிக்கப் பெற்றது.

(வரி 30) அவ்வூரிலேயே 50 நிவர்த்தனம் பரப்புள்ள வயலும் ஒரு சலகே நெல்லும் கொன்ன சர்மனுக்குக் கொடுக்கப்பெற்றது.

(வரி 31) உலக வாழ்வும் அரசபோகமும் பிறவும் மின்னொளிபோல் நிலையற்றது என்பதைக் குறிக்கொண்டு சந்திரனும் சூரியனும் பூமியும் கடலும் உள்ளளவும் நம்மரச வமிசத்தவரும் பிறரும் தம்புகழை நிலை பெறுத்தற்பொருட்டுத் தம் மறங்களினின்று இதனை வேறுபடுத்தாது இக் கொடையையும் காக்கக் கடவர்.

(வரி 33) வேதம்துறை செய்தானாகிய வியாசர் சொல்லு கிறார். (செ. 7 - 9)

(செய்யுள் 10) சளுக்கிய வமிசத்தில் பிறந்தவன், பல்லவ மரபினை அழித்தவன், பகைவர்களை அலைப்பவன், உத்தரவு களுக்கு எவராலும் எதிர்ப்பில்லாதவன் - அளித்தது இச்சாசனம்.

(வரி 37) மஹாஸந்தி விக்ரஹிக ஜயஸேநனால் இச்சாஸனம் எழுதப்பெற்றது.

(வரி 38) ஆஜ்ஞப்தியாகிய குந்தஸ்வாமினுக்கு அரசனால் இச்சாஸனம் தரப்பெற்றது. ஓம் நமோநம : நமஸ்ஸகலவிதே!

## அறியும் செய்திகள்

விக்கிரமாதித்தன், புலகேசியின் பிரபவுத்திரன்; கீர்த்தி வர்மனின் பேரன்; சத்யாச்ரயனுக்கு (இரண்டாம்புலகேசிக்கு) மகன். இச்சத்யாச்ரயன் ஹர்ஷவர்த்தனனைத் தோற்கடித்தவன்.

'சித்திர கண்ட' என்பது விக்கிரமாதித்தனுடைய குதிரை யின் பெயர்.

விக்கிரமாதித்தனுக்கு அநிவாரித, ஸ்ரீவல்லப, ரணரசிக, ராஜமல்ல என்ற விருதுப் பெயர்களுண்டு.

விக்கிரமாதித்தன் பல்லவ அரசர்களாகிய முதலாம் நரசிம்ம வர்மன், இரண்டாம் மகேந்திரவர்மன், பரமேசுவரவர்மன் ஆகியோரை வென்றவன். காஞ்சிபுரம் தக்ஷிண திசைக்குக் காஞ்சி எனும் அணிகலம். (ஒட்டியாணம்) போன்றது; அதன் மதில் ஏறமுடியாதது, தகர்க்க முடியாதது; அதன் அகழி ஆழ மானது, கடக்க முடியாதது.

இச்செப்பேடுகள் சகரயாண்டு 596-ல் கொடுக்கப்பெற்றன; அதாவது ஆங்கிலயாண்டு 674; அநுவிக்கிரமாதித்தனது 20வது ஆட்சியாண்டாகும். இவை சோழநாட்டில் காவிரிக்குத் தென் கரையில் அமைந்த உரகபுரத்தினின்று அளிக்கப் பெற்றன.

சோளிகவிஷயம் என்பது சோழ மண்டலத்தைக் குறிக்கும்.

உரகபுரம் என்பது உறையூர். இவ்வூர் இப்பெயரால் காளிதாசரின் இரகுவம்சத்தில் பாண்டியரது தலைநகரமாகக் குறிக்கப் பெற்றது என்றும்; உரகம் - பாம்பு, எனவே உரகபுரம் நாகப்பட்டினம் ஆதல்கூடும் என்றும், Dr உல்ஷ் கருதுவர். திரு. வெங்கையா அவர்கள் உறையூரையே உரகபுரம் என்பர். [உறையூர்க்கு அண்மையிலுள்ள பெருவளநல்லூரில் நடந்த போரில் இவ்விக்கிரமாதித்தன் தோற்று ஓடியதாகத் தெரிய வருவதால் உறையூரே உரகபுரம் எனப் பெற்றதாதல்வேண்டும் என்பது உறுதி.]

விக்கிரமாதித்யனுடைய மனைவி பெயர் கங்கமஹாதேவி.

கங்கமஹாதேவியின் விருப்பத்தின்படியே கன்ஹசர்மன், பாதம்மஸ்வாமின், கொன்ன சர்மன் ஆகியோர்க்குச் செடுல்லி என்ற ஊரில் தனித்தனி 50 நிவர்த்தனம் வயல் தானமாக அளிக்கப்பெற்றது.

நிவர்த்தனம்: ஒருவன் குறிப்பிட்ட நிலப்பகுதியினின்று புறப்பட்டுக் குறிப்பிட்ட நேரத்துக்குள் நடந்து புறப்பட்ட இடத்தை அடைந்தால், அவனால் எல்லைகோலப்பட்ட நிலப் பரப்பே நிவர்த்தனம் எனப் பெறும்.

கன்ஹசர்மன், ஈச்வரஷடங்கவித் என்பாரின் பேரன் என்றுளது. ஷடங்கவித் என்பது வேதாங்கங்கள் ஆறிலும் வல்லவர் என்று பொருள்படும். (சுந்தரமூர்த்தி சுவாமிகளின் தந்தையாரும் சடங்கவி சிவாசாரியர் எனப்பெற்றமை இங்குக் கருதுக.)

இச்செப்பேடுகளை எழுதியவன் ஜயசேன என்ற பெயரினன். இவன் ஒரு அமைச்சன் போலும், இவன் அலுவல் மஹாஸாந்தி விக்ரஹிக் எனப்பெற்றது.

இதில் ஆஜ்ஞப்தி யாக இருந்தவன், குந்தஸ்வாமின் என்ற பெயரினன். ஆஜ்ஞப்தி என்பது ஆணத்தி என்று தமிழ்க் கல்லெழுத்துகளில் பயிலும் ஆணத்தி-அரசனது கட்டளையை நிறைவேற்றுபவன்.

ஸகலவிதே - முற்றுமுணர்ந்தவன். நம - வணக்கம்.

## சில பொது சுலோகங்கள்

### சுலோகம், 1

ஜயத்யா விஷ்க்ருதம் விஷ்ணோ: வாராஹம் ப்ு ரோபி$^{4}$ தார்ணவம்
த$^{3}$ர்ஷி ணேந்நத த$^{3}$ண்ஷ்ட்ரா க்$^{2}$ராவிஸ்ராந்த பு$^{4}$வநம் வபு:

இதன் பொழிப்பு : பன்றியால் கலக்கப்பட்ட கடல் சூழ்ந்ததும், தென்புறம் மேடான, கோரைப்பல்லில் இருக்கும்படியானதுமான உலகத்தை உடைய, பிரகாசம் பொருந்திய விஷ்ணுவின் உடலானது விளங்குகிறது.

### சுலோகம் 7, 8, 9

ப$^{3}$ஹு பி$^{4}$ரவ்வஸுதா$^{4}$ தத்தா ராஜபி$^{4}$ஸ் ஸக$^{2}$ ராதி$^{3}$ பி:|
யஸ்ய யஸ்ய யத$^{3}$ா பூமிஸ் தஸ்ய தஸ்ய தத$^{3}$ா ப$^{2}$லம்||

இதன் பொழிப்பு : சகரர் முதலிய பல அரசர்களாலே பூதானம் செய்யப்பட்டன; எவரெவர் எவ்வளவு பூமியைத் தானம் செய்தனரோ, அவ்வளவிற்கு அவர்கள் பயன் அடைகின்றார்கள்.

ஸ்வந் த$^{3}$ாதும் ஸுமஹச்ச யக்யம் த்ஹு க$^{3}$மந்யஸ்ய பாலநம்|
தாநம் வா பாலநம் வேதி த$^{3}$ாநாக்சரயே யோநு பாலநம்||

இதன் பொழிப்பு : தன் பொருளைப் பிறர்க்கு அளிக்கலாம், பிறர் தானத்தைப் பரி பாலனம் செய்வது துன்பமானது. தானம் சிறந்ததா காத்தல் சிறந்ததா என்று ஆலோசித்தால் காத்தலே மிகச் சிறந்தது.

ஸ்வத$^{3}$த்தாம் பரத$^{3}$த்தாம் வா யோ ஹரேத வஸுந்தராம்|
ஷஷ்டிம் வர்ஷ ஸஹஸ்ராணி விஷ்டாயம் ஜாயதெ க்ரிமி:||

இதன் பொழிப்பு: "தான் கொடுத்ததாயினும், பிறர் கொடுத்ததாயினும், ஒருதரம் கொடுத்த தானத்தைக் கைப்பற்றுகிறவன் இந்தப் பூமியிலே அறுபதினாயிரம் வருஷம் புழுவாகப் பிறந்து உழல்வான்" (தென்னிந்திய கோயிற் சாசனங்கள் பாகம் II, பக்கம் 1058.)

முடிப்புரை

இக்கத்வல் பட்டயங்களின் வரலாற்றுச் சிறப்பு இதுகாறும் கண்ட வாற்ருன் நன்கு தெளியப்படும். விக்கிரமாதித்தன் உரகபுரத்தினின்று பாண்டியனைத் தாக்கி 'நெல்வேலி'ப் போரில் தோற்ருன்; பாண்டியனிடம் தோற்றவன் பின்னர் 'பெருவளநல்லூர்'ப் போரில் பல்லவனிடம் தோற்றனன் என்பதும் வரலாற்றில் கண்ட உண்மை. இங்ஙனம் வரலாற்று மூலங்களைக் கண்டு ஆய்ந்து வரலாறு கட்டிய பேராசிரியர்களின் உழைப்பு மறக்கற்பாலதன்று.

---

## போங்கல் வாழ்த்து

—:: x ::—

பொங்குக பொங்கல் பொலிக நற்றமிழ்
தங்குக புகழொடு தண்டமி ழாண்மையர்
எங்கும்நம் சிவநெறி எழிலுட னேங்குக
ஓங்குக ஆனினம் ஒப்பில்மா நிலமதில்
தாங்குக தாய்ப்பணி தலையற மதுவே
வழங்குக வானம் வளர்கநற் பயிர்கள்
முழங்குக முத்தமிழ் முயற்சிகள் சிறக்க
இலங்குக நலமுடன் எழிலுள நூற்கள்
செங்கதிர் வேலவன் செவ்வரு ளதனுல்
பொங்கும் மகிழ்ச்சி எங்கும் பொலிய
பொங்குக பாலின் பொங்கலு மினிதே
பொங்குக மங்களம் எங்கணுந் தங்கவே.

ஷண்முகம்.

# கூத்தப்பெருமானும் குமரகுருபரரும்

திரு **A. C. ஷண்முகநயினார். அவர்கள்** பி. ஏ., பி, எல்.,
திருக்குற்றால தேவஸ்தான தர்மகர்த்தா குழு முன்னாள் தலைவர்
தென்காசி.

குமரகுருபரர், சிவனூர் திருமகனாகிய குமரப்பெருமான் அருள் நிரம்பப் பெற்று அவ்வருளிலேயே திளைத்தவர். திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா, வைத்தீஸ்வரன் கோயில் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் முதலிய அழகிய நூல்களை இயற்றி முருகக் கடவுளின் திருவடியில் சாத்தியிருக்கின்றார். இவை பக்தியும் தத்துவமும் இலக்கியமுங் கலந்த சிறந்த நூல்களாகும். இதைப்போல் கூத்தப்பெருமானிடமும் நிரம்பிய காதலுள்ளவர். சிதம்பர மும்மணிக்கோவை, சிதம்பரச் செய்யுட் கோவை முதலிய நூல்களை இயற்றித் தில்லைக் கூத்தப்பெருமானைப் போற்றியிருக்கின்றார். தில்லைக்கூத்தனை அம்பலக் கூத்தன் அற்புதக் கூத்தன், வைதிகக் கூத்தன் என்று அழைப்பார். அவர் ஆடும் திருக்கூத்தை அற்புதக்கூத்து, ஆனந்த நடம், தாண்டவம், பரம நாடகம், மாநாடகம் என்றெல்லாம் புகழ்வார். திருநடனத் திருக்கோலம் ஓமெனும் எழுத்தின் வடிவுடையதென்றும் இறைவனின் ஐந்தொழிலையுங் குறிப்பதென்றும் கூறுவார். இடது திருவடியைத் தூக்கியாடுதலைப் பாராட்டுவார். காளியோடு வாது செய்து ஊர்த்துவதாண்டவமாடியதையும் பதஞ்சலி வியாக்கிரபாத முனிவர்களுக்கு நடனக்காட்சி கொடுத்தருளியதையும் நவில்வார். நிற்க.

கூத்தப்பெருமானின் தத்துவத்தைச் சற்று ஆராய்வோம். கூத்தப்பெருமான் நடராஜப் பெருமான் இரு பெயர்களும் ஒரு கடவுளையே குறிக்கும். கூத்தப்பெருமான் அல்லது நடராஜப் பெருமான் திருநடமாடும் சபைகள் ஐந்து. அத்தனையும் தமிழ் நாட்டிலுள்ளன. திருவாலங்காட்டிலுள்ள இரத்தின சபை, சிதம்பரத்திலுள்ள கனகசபை, திருஆலவாயி (மதுரை) லுள்ள வெள்ளியம்பலம் (இரசிதசபை), திருநெல்வேலியிலுள்ள தாமிர சபை, திருக்குற்றாலத்திலுள்ள சித்திரசபை என்பன. இவ்வைந்தில்

இரண்டு தாமிர சபையும் சித்திர சபையும் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ளன.

பிரபஞ்சமெல்லாம் சிவசக்தியின் சொருபமாகிய சிவ பெருமான் திருக்கூத்தாம். திருமூலர் இதை இவ்வாறு கூறு கின்றார்.

"எங்குந் திருமேனி யெங்குஞ் சிவசக்தி
எங்குஞ் சிதம்பரம் எங்கும் திருநட்டம்
எங்குஞ் சிவமா யிருத்தலா லெங்கெங்கும்
தங்குஞ் சிவனருட் டன்விளை யாட்டதே".

அவன் திருக்கூத்து இல்லாத இடமில்லை. அண்டங்களி லெல்லாம் அவன் திருக்கூத்து நிகழ்ந்து கொண்டேயிருக் கின்றது.

"அண்ட மெழுகோடி பிண்ட மெழுகோடி
தெண்டிரை சூழ்ந்த திசைக ளெழுகோடி
யெண்டிசை சூழ்ந்த விலிங்க மெழுகோடி
அண்ட வடஞ்செயு மாலயந் தானே"

ஆகவே இறைவன் திருக்கூத்து இல்லாத இடமில்லை யென்றும் திருகூத்து இல்லையாயின் அண்டசராசரங்களும் இல்லையென்பதும் தெரியக்கிடக்கின்றன. எனினும் இந்த ஐம் பெருஞ்சபைகளில் இறைவனுடைய திருநடனம் விசேடமாக நடை பெறுகின்றது என்று நூல்கள் கழறுகின்றன. இறைவன் எல்லா இடங்களிலும் எல்லாப்பொருள்களிலும் கலந்து வியாபகமாகி யிருப்பினும் ஐம்பெரும் பூத தலங்களாகிய காஞ்சி (பிருதுவி) திருவானைக்கா (அப்பு) திருஅண்ணாமலை (தேயு) காளத்தி (வாயு) தில்லை (ஆகாயம்) முதலிய தலங்களில் அவருடைய வியாபகமும் சானித்தியமும் சிறப்புடையன. இத்தலங்களைப் போலவே ஐம்பெருஞ் சபைகளும் சிறப்பு வாய்ந்தவை.

தாவரமாகிய அண்டமும் சங்கமமாகிய பிண்டமும் சமமாத லால் பிண்டமாகிய சரீரத்தில் இடைகலைக்கும் பிங்கலைக்கும் நடுவிலுள்ள சுழுமுனைநாடியும் பிரமாண்டத்திலுள்ள இப்பரத கண்டத்தில் இலங்கைக்கும் இமயமலைக்கும் நடுவிலுள்ள தில்லையும் சிவபெருமான் ஆனந்தநடஞ் செய்யும் ஸ்தானமாம்.

"பண்டையா காசங்கள் ஐந்தும் பதியாகத்
தெண்டி னிற்சத்தி திருஅம் பலமாகக்
கொண்டு பரஞ்சோதி கூத்துகந் தானே'' எனவும்,

(தெண்டினில்-சுழுமுனையில்)

"இடைபிங் கலையிம வானே டிலங்கை
நடுநின்ற மேரு நடுவாஞ் சுழுமுனை
கடவுந் தில்லைவனங் கைகண்ட மூலம்
படர்வொன்றி யென்னும் பரமாம் பரமே.''

இந்த நடனம்,

"காட்ட அனல்போல் உடல்கலந்து உயிரையெல்லாம்
ஆட்டுவிக்கும் நட்டுவன் நம்மண்ணலென எண்ணுய்.''

என்று கடவுள் மாமுனிவர் இயற்றிய திருவாதவூரர் புராணம் புத்தரை வாதில் வென்ற சருக்கத்தில் புகழப்படுகின்றது. இக் கருத்தையே அப்பர் சுவாமிகள் "விறகிற் றீயினனெ"ன்று பாடுகிறுர். Eckhart என்ற ஞானி "Just as the fire infuses the essence and clearness into the dry wood so has God done with man'' என்று சொல்கிறுர்.

திருநடனமாவது பஞ்சகிருத்யமாம். அது "ஐந்து நலமிகு தொழில்களோடு நாடக நடிப்ப நாதன்'' என்று சிவஞான சித்தியாரிலும்

"தோற்றந் துடியதனிற் றேயும் திதியமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் – ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு''

என்று உண்மை விளக்கத்திலும் கூறப்படுகின்றது. டாக்டர் ஆனந்தக்குமார சுவாமி தாம் எழுதிய 'சிவ நடனம்' 'Dance of Siva' என்ற நூலில் நடன தத்துவத்தை விளக்க இப் பாட்டையே எடுத்து ஆதாரமாகக் கொண்டு விரிவாய் எழுது கின்றுர்.

குமரகுருபர சுவாமிகள் சிதம்பர மும்மணிக் கோவையில் கீழ்க்கண்டவாறு திரு நடன தத்துவத்தை விளக்குகின்ருர்.

"பூமலி கற்பகப் புத்தேள் வைப்பும்
நாமநீர் வரைப்பி னிலவ ளாகமும்
ஏனைப் புவனமு மெண்ணிங் குயிரும்
தானே வகுத்ததுன் றமருகக் கரமே
தனித்தனி வகுத்த சராசரப் பகுதி
அனைத்தையுங் காப்பதுன் னமைத்தபொற் கரமே
தோற்றுபு நின்றஅத் தொல்லுல கடங்கலும்
மாற்றுவ தாரழல் வைத்ததோர் கரமே
ஈட்டிய வினைப்பய னெவற்றையு மறைத்துநின்
றூட்டுவ தாகுநின் னூன்றிய பதமே
அடுத்தவின் னுயிர்கட் களவில்பே ரின்பம்
கொடுப்பது முதல்வநின் குஞ்சித பதமே"

புத்தேள் வைப்பு-தேவ லோகம். வளாகம்-பரப்பு. எண் நீங்கு உயிரும்-அளவில்லாத ஆன்மாக்கள். அமைத்தகரம்-அபயக்கரம். அடங்கல்-சங்கரித்தல். மறைத்தல். ஆன்மாக்கள் சுத்தமடையும்போது இன்பந்தரும் புண்ணியத்திலாவது துன்பந் தரும் பாவத்திலாவது மனஞ் செல்லாது சிவஞானத்திலே மனஞ் செலுத்தும். இது மலங்களின் வலியைக் குறைத்துத் தடுத் தலினுல் உண்டாகும். இது மறைத்தல்.

பிறருதவியின்றித்தானே அண்டங்களை யெல்லாம் சிருஷ்டி செய்வது உடுக்கை யேந்திய திருக்கை. உடுக்கையினுல் நாதத் தைக் கிளப்பி ஆன்மாக்கள் மலமொழிந்து வீடு பேறடைவதற் கான புவன சிருஷ்டியைச் செய்வர். அமைத்த திருக்கை காத்தற் தொழிலைக் குறிக்கும். அக்கினி ஏந்திய கை அழித்தல் தொழிலைக் குறிக்கும். ஊன்றிய திருவடி பிரபஞ்சத்தை மறைக்கும் தொழிலைக் காட்டும். தூக்கிய திருவடி அனுக்கிரகத் தொழிலைக் குறிக்கும். இவ்வடிகளில் கூத்தப் பெருமான் திரு நடனக் கோலத்தில் ஐந்தொழில் புரியும் குறிப்பு உணர்த்தப்படுகின்றது. இத்திருக்கூத்தை "ஒருகால் நோக்கிப் பரகதி பெறுவான்" என்று கூத்தைத் தரிசிப்பதின் பயனையுங் கூறுகின்ருர்.

குமரகுருபரர் இப்பயனை எவ்வாறு அருள்கின்றார்? அம்பிகையின் மூலமாயென்கிறார். அம்பிகையின் கருணையை,

"பாலுண் குழவி பசுங்குடர் பொறாதென
நோயுண் மருந்து தாயுண் டாங்கு
மன்னுயிர்த் தொகுதிக் கின்னருள் கிடைப்ப
வையமீன் றளித்த தெய்வக் கற்பின்
அருள்சூற் கொண்ட வையரித் தடங்கட்
டிருமாண் சாயற் றிருந்திழை காணச்
சிற்சபை பொலியத் திருநடம் புரியும்
அற்புதக் கூத்த................"

குழந்தையின் குடல் மருந்தைச் சீரணிக்கும் சக்தியற்றதென்று உணர்ந்த தாய் அம்மருந்தைத் தானுண்டு அதன் பயனை முலைப் பாலின் வழியே அக்குழந்தைக்கு ஊட்டி நலம் பெறச் செய்வது போல நடராசமூர்த்தியின் சக்தியாகிய சிவகாமி யம்மை திரு நடனத்தைத் தரிசித்து அதன்பயனை ஆன்மாக்களுக்கு ஊட்டு வாள் என்று அழகாகவும் யாவருக்கும் விளங்கும் படியாகவும் தெளிவுறக் கூறுகின்றார்.

திருநடத்தால் ஆன்மாக்கள் மல நீக்கமும் வீடுபேறும் பெறுகின்ற தன்மையை 'உண்மை விளக்கம்' இவ்வாறு கூறு கின்றது.

"மாயைதனை உதறி வல்வினையைச் சுட்டுமலம்
சாய அமுக்கிஅருள் தானெடுத்து – நேயத்தால்
ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல்
தானெந்தை யார்பாதம் தான்".

திரு நடனத்தின் நோக்கம் மலநீக்கமென்று,

"மன்றுள் நிறைந்து பிறவி வழக்கறுக்க
நின்ற நிருத்த நிலைபோற்றி"

என்று "போற்றிப்பஃறொடையிலும்"

"நீங்கவரும் பவத்தொடர்ச்சி நீங்கமன்றுள்
நின்றிமையோர் துதிசெய்ய நிருத்தஞ்செய்யும்"

என்று சிவப்பிரகாசத்திலும் சொல்லப்படுகிறது.

மாணிக்கவாசக சுவாமிகள் "ஆர்த்த பிறவித் துயர்கெட நாமார்த்தாடும் தீர்த்தன்" என்று மலநீக்க நோக்கத்தையும் "இவ்வானுங் குவலயமும் எல்லோமும் காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி" என்று இறைவன் தொழிலையும் ஒரு திருப் பாட்டிலமைத்து விளக்கியிருக்கின்ருர்கள். திருநடனம் இல்லா விட்டால் என்ன? திருநடனத்தை இயற்ருவிடின் உலகமெல்லாம் புலாலில் பதிந்த வேலையுடைய காளி தேவிக்கு உணவாகிவிடும் என்று மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச்செய்திருக்கின் ருர்கள்.

"தேன்புக்க தண்பணைசூழ் தில்லைச்சிற் றம்பலவன்
தான்புக்கு நட்டம் பயிலுமது என்னேடி
தான்புக்கு நட்டம் பயின்றிலனேல் தரணியெல்லாம்
ஊன்புக்க வேற்காளிக்(கு) ஊட்டாங்காண் சாழலோ"

திருநடனமென்பது இசையுடன் கலந்த இறைவனது சலன மென்றும் ஊனுடம்பில் இருதயமானது எப்போதும் துடித்து மனிதனை ஜீவிக்கச்செய்கின்றது. துடிப்பு இல்லையாயின் ஜீவித மும் இல்லையாய்விடும் என்பது போன்று இறைவனுடைய திரு நடனத்தால் உலகம் நடைபெறுகிறதென்றும் நடனமில்லையேல் உலகம் நடைபெருதனவும் பெறப்படுமென்றும் திருநடனத்தின் வேகத்தைத் தணித்து ஓர் கட்டுப்பாட்டுக்குள் அமைக்கிற தன்மையில் சிவகாமியம்மையார் தாளம் போடுவது அமைந் திருக்கிறதென்றும் விஞ்ஞானிகள் கூறுவார்கள். திசைகாட்டுங் கருவி எங்கு சென்ருலும் எத்திசையிலிருந்தாலும் அக்கருவி வடதிசையையே காட்டுவதால் தெற்கு நோக்கி ஓர் சக்தி யிருந்து தன்வசம் எல்லாவற்றையுந் திருப்புவதுபோல் கூத்தப் பெருமான் தெற்குநோக்கியிருந்து எல்லாப் பொருள்களையும் தன்வசமிழுக்கின்ருன் என்றுங் கூறுவர்.

இத்திருநடனத்தை அருட்கண்ணும் அருள்ஞானமும் பெற்ற நம்முன்னேர்கள் அறிந்து அனுபவித்திருக்கின்ருர்கள். மேனுட்டார்களும் இதை ஒருவிதமாய் அறிந்திருக்கிருர்கள். சில நூற்ருண்டுகளுக்கு முன் திகழ்ந்த லூசியன் (Lucian) என்பார் இதைக் குறிப்பிடுகின்ருர்.

"It would seem that dancing came into being at the beginning of all things and was brought to light together with Eros, that ancient one for we see this primeval dancing clearly set forth in the choral dance of the constellations and in the planets and fixed stars, their interweaving and interchange and orderly harmony". Eros என்பதைக் கூத்தனென்று சொல்லலா மல்லவா?

திருநடத்தின் தன்மையையும் பெருமையையும் வேகத் தையும் காரைக்காலம்மையார் நகைச்சுவையுடன் பாடுகின்றார்.

"அடிபேரிற் பாதாளம் பேரும் அடிகள்
முடிபேரின் மாமுகடு பேரும் — கடகம்
மறிந்தாடு கைபேரில் வான்திசைகள் பேரும்
அறிந்தாடும் ஆற்று தரங்கு"

திருக்கூத்தின் வகைகள் எத்தனை யென்று இன்னும் முடிவு கட்டவில்லை. கட்டவும் முடியாது. திருமூலர் ஐவகைக் கூத் தைக் குறிப்பிடுகின்றார்.

"சிற்பரஞ் சோதி சிவானந்தக் கூத்தனை
சொற்பதமா மந்தச் சுந்தரக் கூத்தனை
பொற்பதிக் கூத்தனை பொற்றில்லைக் கூத்தனை
அற்புதக் கூத்தனை யாரறி வாரே"

அதாவது சிவானந்தக் கூத்து; சுந்தரக்கூத்து; பொற்பதிக் கூத்து; பொற்றில்லைக் கூத்து; அற்புதக்கூத்து; என்பன. இக் கூத்துகளின் இலக்கணங்களைப் பலபாக்களில் விளக்கியிருக் கின்றார். இன்னுமொரு பாட்டு திருமந்திரத்தில் இவ்வாறு வருகின்றது.

"கொடுகொட்டி பாண்டரங் கோடுசங் கார
நடமெட்டோ டைந்தாறு நாடியு ளாடுந்
திடமுற் றெழுந்தேவ தாருவாந் தில்லை
வடமுற்ற மாவன மன்னவன் தானே"

இதற்கு ஓர் உரையாசிரியர் எழுதிய உரையாவது:

"கோடுகோட்டி (கொடுங்கொட்டி) எல்லாவற்றையும் அழித்து நின்று ஆடுங்கூத்து. பாண்டம் (பாண்டரங்கம்) முப்புரங்களை யெரித்து அவற்றினிற்றினை யணிந்து நின்ருடிய கூத்து. கோடு (காபாலம்) பிரமனது சிரசைக் கரத்திலேந்தி யாடியகூத்து. சங்காரம் சங்காரகாலத்துச் செய்யுங்கூத்து. சங்கரநடமெட்டோடு பஞ்சகிருத்திய தாண்டவத்துடன் முனிதாண்டவம், அனவரததாண்டவம், ஆனந்த தாண்டவம், மென்னுமெட்டோடு, ஐந்து சிவானந்தக்கூத்து முதலியன, ஆறு பஞ்சகிருத்திய நடனமும் பிரளய கால ஆனந்த நடனமுமாகிய ஆறும்."

இதனுல் நடனவகைகள் பலபலவென்றும் அவைகளனைத்தும் திருமூலர் கூறும் ஐவகைக் கூத்தின் பிரிவுகள் என்றுந் தோன்றுகிறது. மயிலை சீனி வேங்கடசாமி என்ற ஆராய்ச்சியாளர் தாம் எழுதிய 'இறைவன் ஆடிய எழுவகைத்தாண்டவம்' என்ற நூலில் தாண்டவம் 7 என்று கூறி அதற்குத் திருப்புத்தூர்ப் புராணத்தை ஆதாரமாகக் காட்டுகின்ருர். அவை யாவன: ஆனந்ததாண்டவம், சந்தியாதாண்டவம், கௌரி தாண்டவம், திரிபுரதாண்டவம், காளிதாண்டவம், முனிதாண்டவம், சங்காரதாண்டவம். விளக்கம் அந்நூலிற் காணப்படும்.

தவிர, சிதம்பரம் நடராஜர் கோயில் கோபுரத்தில் 108 வகை நடனங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன வென்றும், இவைஅநேகமாய்ப்பரதநாட்டிய சாஸ்திரத்திலுள்ள நடனவகைகளை ஒத்திருக்கின்றன வென்றும், கல்கத்தாப் பல்கலைக்கழகத்தின் "பண்டை இந்திய வரலாறும் பண்பாடும்" என்ற இலாக்காவின் தலைவரும் பேராசிரியருமாகிய ஜிதேந்திரநாதபேனர்ஜி தாம் எழுதிய ஹிந்துவிக்ரக ஆராய்ச்சி நூலில் குறிப்பிடுகின்ருர்.

[தொடரும்]

# சிவஞான யோகிகளின் கவித்திறமும் பக்திச் சிறப்பும்

திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள் எம். ஏ.,

## 1. சிவஞான யோகிகளின் வரலாறு:-

இம் முநிவர் பெருமானது பிள்ளைத் திருநாமம் "முக்களா லிங்கர்" என்பது. திருநெல்வேலி ஜில்லாவில் பாபநாசம் என்னும் திருப்பதியைச் சார்ந்த விக்கிரமசிங்கபுரம் இவரது ஊர். இவர் சைவ வேளாள குலத்தினர். இவரது தந்தையார் ஆனந்தக் கூத்தர். கல்விச் செல்வமும் பொருட்செல்வமும் ஒருங்கே அமைந் தவர். இவரது தாயார் 'மயிலம்மையார்' கற்பிற் சிறந்த காரிகை. முக்களாலிங்கரது ஐந்தாவது வயதிலேயே அடியார்களிடம் அவருக்கிருந்த பக்தி வெளிப்படலாயிற்று. பள்ளிக்கூடத்தி லிருந்து வரும்போது எதிரில் சிவனடியார்கள் சிலர் வரக்கண்ட இவர் "நீங்கள் அடியேனது இல்லத்துக்கு அமுது செய்ய எழுந்தருள வேண்டும்" என அவர்களை வேண்டி வணங்கினர். ஆண்டில் இளைஞரும் அறிவிற் பெரியரும் ஆய அப்பிள்ளையின் வழிபாட்டிற்கு இரங்கி அப்பெரியோர்கள் உண்ண உடன் பட்டனர். பிள்ளையின் கருத்தின்படி மயிலம்மையாரும் தம் மகனர் அழைத்து வந்த அடியார்களை உபசரித்து அமுது செய் வித்தனர். தம் சொற்படி அடியார்களுக்குத் தமது தாய் அமுதளித்த அன்பை வியந்த மகனர்,

> "அருந்ததி என்அம்மை அடியவர்கட் கென்றும்
> திருந்த அமுதளிக்கும் செல்வி—பொருந்தவே
> ஆனந்தக் கூத்தர் அகமகிழத் தொண்டுசெயும்
> மானம் தவாத மயில்."

என்னும் பாடலைப் பாடித் தமது பெற்ருேர்களையும், வந்த அடியார்களையும் மகிழ்வித்தனர். பின்னும், இளைய பருவத்தே ஒரு நாள் தோட்டத்திலிருந்த வாழைக் கன்றுகளை ஒரு கன்றுக்

குட்டி தின்றுவிட அதைக் கண்ட இக் குழந்தை "அப்பா! நமது படப்பையில் இருந்த வாழைக் கன்றுகளைக் கன்றுக் குட்டி மென்று மென்று தின்றுவிட்டது" எனத் தனது அப்பாவிடம் முறையிட்டதாம். இங்ஙனம் கருவில் திருவாய்ந்த இச்செல்வர் பின்னர் திருவாவடுதுறையை அடைந்து சிவதீட்சையும், "சிவ ஞானயோகிகள்" என்னும் தீட்சா நாமமும் பெற்றுச் சிவ ஞானபோதம் ஆதிய சாத்திர நூல்களைத் தமது ஞானதேசிக ராகிய "பின் வேலப்ப தேசிக"ரிடம் கேட்டு விளக்கம் பெற்றனர். வடமொழியையும் தென்மொழியையும் முற்றுருங்குணர்ந்தனர். தருக்க நூல்களையும் கற்று வல்லவராயினர். சைவ சாத்திரங் களின் மெய்ப்பொருள் விளங்கும் வண்ணம் சிவஞான போதத் திற்குத் "திராவிட மகாபாடியம்" எனப் பெயர் பெற்ற விருத்தி யுரை ஒன்றை எழுதி வெளியிட்டனர். இவர் இயற்றிய நூல்கள் :–

காஞ்சிப் புராணம் முதற்காண்டம், கம்பரந்தாதி, கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதி; இளசைப்பதிற்றுப் பத்தந்தாதி, குளத் தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி, கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழ், சோமேசர் முதுமொழி வெண்பா முதலிய பிரபந்தங்கள்.

இவர் திருவாவடுதுறையில் விசுவாவசு ஆண்டு (1785 A. D.) சித்திரை மாதம் ஆயில்ய நட்சத்திரத்தில் சிவத்தொடு கலந்தனர். அகத்திய முநிவரைப்போல இவருக்கும் பன்னிரு மாணுக்கர்கள் இருந்தனர். இவர்களுள் தலைசிறந்தவர்கள் தணிகைப் புராணம், தணிகை ஆற்றுப்படை, பேரூர்ப் புராணம், திருவானைக்காப் புராணம் முதலிய அருமை நூல்களைப் பாடிய 'கவி ராட்சதர்' எனப்பெயர் பெற்ற கச்சியப்ப முநிவரும், 'மதுர கவி' எனப்பெயர் பெற்ற மாதவ சுப்பிரமணிய முநிவரும் ஆவர்.

## 2. சிவஞான யோகிகளின் கவித்திறம் :–

இவர் வாக்கு செம்பாகமானது. அழகிய எளிய நடையது. ஆயினும் அணி நலங்கள் நிரம்பியது. இதற்கு உதாரணமாக இரண்டொரு பாடல்கள் இவர் அருளிய காஞ்சிப் புராணத் தினின்றும் எடுத்துக் காட்டுவாம்.

(1) கடவுள் வாழ்த்தில்

வயிரவர் வணக்கம் கூறவந்த இவர் எளியரை வலியர் வாட்டின் வலியரைத் தெய்வம் வாட்டும் என்னும் பழமொழியை விளக்க மாவலியைச் செற்ற வாமனரைச் செகுத்து அவரது உடற்றோலைச் சட்டையாகப் போர்த்த வரலாற்றை எடுத்துக் காட்டாகப் பாட்டில் பின்வருமாறு அமைத்துள்ளார்.

"எளியரை வலியர் வாட்டின் வலியரை
இருநீர் வைப்பின்
அளியறத் தெய்வம் வாட்டும் எனும்
உரைக்கமைய அன்றே
தெளியுமா வலியைச் செற்றோற்
செகுத்துரிக் கவயம் போர்த்த
வளியுளர் கச்சி காவல் வயிரவர்க்
கன்பு செய்வாம்"

(2) அவையடக்கம் கூறவந்த இவர்

எழுத்துப்போலியையும் எழுத்தென இலக்கண நூலார் எடுத்தாளுவர்; அதுபோல, சிவகதையைக் கூறவந்த நாயினேன் பிதற்றிய செய்யுட் போலியையும் பழுத்த கேள்வியோர் வெருது கைக்கொள்வர் என்கின்றனர், அப்பாடல் பின்வருமாறு:—

"எழுத்துப் போலியும் எழுத்தென ஆளுவர் அதுபோல்
புழுத்த நாயினேன் பிதற்றிய செய்யுட் போலியையும்
பழுத்த கேள்வியோர் கைக்கொள்வர் என்பதுபற்றி
விழுத்த நாணினேன் சிவகதை விளம்புதற் கிசைந்தேன்"

(3) நாட்டுப் படலத்தில் :—

(i) பலபல அருவிகள் பாலாற்றில் ஒருங்குசென்று அணையுந் தோற்றம் பலதிசைகளில் இருந்துவரும் வழிகள் ஒரு மூதூரை அணுகுவதையும்; பலபல மதங்கள் ஈற்றில் ஒருவழிப் படுதலையும் ஒக்கும், எனப் பின்வரும் பாடலில் விளக்குகின்றார்.

"விலகிவீழ் அருவித்தாரை வேறுவேருக ஓடிக்
குலநதிப் பாலிவைப்பின் ஏகமாய்க்கூடும் தோற்றம்

அலகில் பல்வழியும் மூதூர் அணிமையின் ஒன்றுமாறும்
பலபல மதமும் ஈற்றின் ஒருவழிப்படலும் போலும்.''

(ii) வறுமையுற்றபோதும் தொண்டை நாட்டினர் தங்கள் உடலை வருத்தியேனும் ஏற்போர்க்கு ஈவர்; அதுபோல வேனிற் பருவத்தில் ஞாயிற்றின் வெப்பத்தால் சூடேறிய பாலாறு தனது சீர்மைகுன்றுது தன்னகத்துள்ள மணலைக் கீண்டித் தோண்டு வோர்க்குத் தெள்ளிய நன்னீரைக் கொடுத்து உதவும் என்னும் அழகிய உவமைக் கருத்தமைந்தது பின்வரும் பாடல்.

"வறுமையுற் றுழியுந் தொண்டை வளமலி நாட்டோர் தங்கள்
இறுமுடல் வருத்தி யேனும் ஈவதற் கொல்கா ரற்றே
தெறுகதிர் கனற்றும் வேனிற் பருவத்துஞ் சீர்மை குன்று(து)
உறுமண லகடு கீண்டும் ஒண்புனல் உதவும் பாலி''

(iii) சாதுர்யமாகப் பாடிய பாடல்கள் சிலஉள. அவற்றில் பின்வரும் பாடல் ஒன்று.

"ஆணெலாம் ஒருகன்னியை மணப்பவான் அணையும்
கோணை வேங்கைகள் ஆட்டினே(டு) உறவுகொண்டோங்கும்
பேணுசேவினம் சிங்கம் மேல்ஏறிடும், பிழையா(து)
ஏணிருற்பொலி எகினங்கள் இடபத்தை விழுங்கும்''

இச்செய்யுள் வெளித்தோற்றத்திற்குப் பின்வருமாறு பொருள் தரும்.

ஆண்களெல்லாம் ஒருகன்னிப் பெண்ணை மணக்க அணை வார்கள்; வேங்கைகள் (புலிகள்) ஆட்டினுடன் உறவு கொள்ளும்; சேஇனங்கள் (எருதுகள்) சிங்கத்தின் மேல் ஏறும்; (எகினங்கள்) அன்னப்பட்சிகள் இடபங்களை (எருதுகளை) விழுங் கும்; ஆனல், இதன் உட்பொருளோ எனின், ஆணெலாம் (ஆண் என்னும் மரவகைகள்) கன்னியை (வானிலுள்ள கன்னி ராசியை) அணையும் அளவுக்கு உயர்ந்துள்ளன; வேங்கைகள் (வேங்கை மரங்கள்) ஆட்டினேடு (மேடராசிவரைக்கும்) உயர்ந் துள்ளன, சேர (சேங்கொட்டை) மரங்கள் சிங்கராசி வரைக்கும் உயர்ந்துள்ளன; எகினங்கள் (புளியமரங்கள்) இடபராசியையும் தாண்டி வளர்ந்துள்ளன-என்பதாகும்.

(4) நகரப் படலத்தில் :-

(i) பரத்தையர் தெருவை விளக்க வந்த இவர் பரத்தையரின் வன்மையைப் பின்வருமாறு புலப்படுத்துகின்றார்.

“தவமறைக்கிழவன் மாயன் தாணுஎன்றிவரும் இவ்வூர்க்
கவர்மனப் பரத்தை மாதர் கண்வலைப்பட்டே இன்றும்
இவறிய அலரோன் மாலோன் பித்தனென்(று) இப்பேர்பெற்றார்
சிவசிவ யாவரேயோ இவர்திறத்தகப் படாதார்”

இதன் பொருள் :-

தவம் நிறைந்தவனும் வேதம் உணர்ந்தவனும் கிழவனுமான பிரமன் என்ன! மாயைகளில் வல்ல திருமால் என்ன! எதற்கும் நிலைகலங்காதவராய்த் ‘தாணு’ என்ற பெயர் பெற்ற சிவன் என்ன! ஆகிய இம்மூவரும் கூட, காஞ்சியிலுள்ள பரத்தையரின் கண்வலைப்பட்டுத்தான் அலரோன், மாலோன், பித்தன் எனப் பேர் கெட்டவர் ஆனார்கள்; எங்ஙனமெனில் பிரமன் அலரோன் எனப்பேர் பெற்றனன். அலரோன் என்பதற்குப் “பழிச் சொல்லுக்கு இடமானவன்” எனப் பொருள். மாலோன்- (பெண்) மயக்கம் கொண்டவன். பித்தன்-(பெண்) பித்துப் பிடித்தவன். என்பது பொருள். ஆதலால், “சிவசிவ யாவரே பரத்தையர் மயக்கிற் சிக்குறாதவர்” என வேற்றுப் பொருள் வைப்பணி விளங்கப் பாடியுள்ளார்.

ii. யோகியர், துறவிகள் இருப்பிடத்தைப் பின்வரும் அருமையான பாடலில் ஆசிரியர் விளக்குகின்றார்.

“காமனை முனிந்து, நெடுஞ்சடை முடித்துக்
கவின்ற கல்லாடை மேற் புனைந்து
யாமெலாம் வழுத்தும் துறவி யென்றிருந்தும்
ஒருத்திதன் இளமுலைச் சுவடு

தோமுறக் கொண்டார் எனச்சிறையிடல்போல்
சுடர் மனக் குகையுள் ஏகம்பத்(து)
ஓம்மொழிப் பொருளை அடக்கி ஆனந்தம்
உறுநர்வாழ் இடம்பல உளவால்”

இதன் பொருள்:-

பெண் மயக்கு இல்லாதவர் போலக் காமனை எரித்தார், சடைமுடி கொண்டார், காவியாடை புனைந்தார்; துறவிகளாகிய யாம் எல்லாம் போற்றும் பெருந் துறவியாய் உள்ளார்; இங்ஙனம் இருந்தும் இவர் ஒரு மாதின் ஏலவார் குழலியின் இளமுலைச் சுவட்டைக் கொண்டார். ஆதலால் இவரைத் தண்டிக்க வேண்டும்; சிறையில் இடவேண்டும் என்பார் போல. ஓம் மொழிப் பொருளாம் ஏகாம்பரரைத் தமது சுடர்மனக் குகையுள் அடக்கி ஆனந்தப்படும் பெரியார்களின் இருப்பிடங்கள் பல அந்நகரில் இருந்தன.

3. இவரது பக்தித் திறத்தைக் கூறுவாம் :-

மாவடியில் வீற்றிருக்கின்றார் ஏகாம்பரநாதர் என்பதைக் கூறவந்தவர் அக்கருத்தைப் பின்வரும் அழகிய உவமை நயம் சிறந்த இரண்டு பாடல்களால் விளக்குகின்றார்.

“பற்பல தேயமெல்லாம் பாங்குடைத் தொண்டைநாடு
பற்பல சங்கநாப்பட் படர்வலம்புரி யாமங்கட்
பற்பல நகரமெல்லாம் வட்டமாப் படைத்த காஞ்சி
பற்பல வலம்புரிக்குட் சலஞ்சலப் பணிலம் ஆமால்”

“அத்திருக் காஞ்சிவைப்பின் அலகிலாத் தலங்கள்தம்முட்
பத்திசேர் மாடக்கம்பம் பாஞ்ச சன்னியமாம் அந்த
உத்தமச் சுரிமுகத்துள் விலைவரம் புணராச் சாதி
முத்தமே ஒருமா மூலத்(து) இருந்தருள் முக்கண்மூர்த்தி”

இதன் பொருள் :-

பற்பல நாடுகளின் மத்தியிலுள்ள தொண்டை நாடு பற்பல (இடம்புரிச்) சங்கங்களின் மத்தியில் உள்ள ஒரு வலம்புரிச் சங்கத்தை ஒக்கும்; தொண்டை நாட்டில் உள்ள பற்பல நகரங்களின் இடையில் உள்ள காஞ்சிமா நகர் பற்பல வலம்புரிச் சங்கங்களின் இடையிற் சிறந்துள்ள சலஞ்சலம் என்னும் உயரிய சங்கத்தை நிகர்க்கும்; அக்காஞ்சிமா நகரத்திலுள்ள பற்பல கோயில்களின் இடையில் உள்ள ‘மாடக் கம்பம்’ என்னும் ஏகாம்பரநாதர் திருக்கோயில் பற்பல சலஞ்சலங்களுட் சிறந்து விளங்கும் பாஞ்ச சன்னியத்திற்கு நிகராகும்; அந்த உத்தமச்

சங்கமாம் பாஞ்ச சன்னியத்தின் உள்ளே விளங்கும் சாதி முத்தங்கண்டாய் அம்மாடக் கம்புத்தில் வீற்றிருக்கும் எங்கள் முக்கண் மூர்த்தியாம் ஏகாம்பரநாதர். ஆஹா! என்னே! இவரது பக்தி? பின்னும் சிவஞான யோகிகளின் பக்தித் திறத்தின் உச்ச நிலையை - அகத்திய முநிவர் ஏகாம்பர நாதரைத் தொழுது வேண்டுகின்ற நிலையிற் - பாடிய பாடல்களாக வரும் கீழ்க் காட்டிய ஆறு பாடல்களிற் கண்டு களிக்கலாம்.

1. "இந்நாள் எனக்குப் *பயப்பட்டதிப் பிறவி
இந்நாள் எனக்குப் பயப்பட்டதியான் செய்தவம்
இந்நாள் எனக்குப் பயப்பட்ட தென்னறிவும்
இந்நாள் உனைக்காணப் பெற்றமையின் எங்கோவே!"

2. "எண்ணமெலாம் எய்தினேன், எண்ணமெலாம் எய்தினேன்
எண்ணமெலாம் எய்தினேன் எங்கள் பெருமானே!
கண்ணனொடு நான்முகனும் காணாத் துணையடிகள்
கண்ணெதிரே இற்றைநாள் யான்காணக் காட்டினையால்."

3. "சங்கரா! சம்புவே! சங்கரா! சம்புவே!
சங்கரா! சம்புவே! சாம்பசிவனே! என்
அங்கணா என்றென்றும் ஒலிட் டழைத்தரற்றும்
இங்கெனக்கு வாழ்நாள் இவ்வாறே போகியவே."

4. "குன்றாத அன்புனக்கே; குன்றாத அன்புனக்கே;
குன்றாத அன்புனக்கே; மிக்கோங்கு கொள்கையது
என்றும் எனக்குண்டாக! என்றும் எனக்குண்டாக!
என்றும் எனக்குண்டாக! என்றும் ஓர்பெற்றியனே!"

5. "வையமிசைத் தோற்றமுதற் சாங்காறும் மன்றஉனைத்
தெய்வமெனப் பேணாத் திருவிலிகள் என்குலத்தில்
எய்தி ஒருஞான்றும் பிறவற்க, எய்துறினும்
வெய்தென மற்றாங்கே விளிந்தொழிக எம்மானே."

6. "ஆனேறுயர்த்தருளி அன்றினார் ஊர் எரித்த
கோனே எனக்குக் குலதெய்வம் ஆம்பேற்றால்
யானே பெருஞ்செல்வன்! யானே பெருஞ்செல்வன்!
யானே பெருஞ்செல்வன் எல்லா உலகினுமே."

---

* பயப்பட்டது – பலன்பட்டது.

# திருவருள் செய்க

திரு. சு. கு. சம்பந்தமூர்த்தி அவர்கள்,
வலங்கைமான்.

திருவளர் பாண்டித் தென்றமிழ் நாட்டின்
மருவளர் பொழிற்றிரு வைகுண் டந்தனில்
சைவநன் மணியாஞ் சண்முக சிகாமணி
செய்தவம் விளங்கச் செகமுழு துய்ய
உலகெலாம் அன்ன தானங்க ளோங்கிடப்
பலர்புகழ் சிவன்பேர் பாரெலாம் பரவ
இல்லற மல்லாற் றுறவற மதனிலும்
பல்லறம் புரியும் பண்புக டோன்ற
வந்தவ தரித்த மாசிலா மாதவத்
தெந்தை பெருமான் குமர குருபரர்
சிந்தை மகிழ்வுறுஞ் செயலே செய்திடும்
முந்தைநற் றவமுறு முழுத்துற வினராய்க்
காசிமா மடத்துக் கவினுறு மிருபதின்
மாசிலா மணியாய் மன்னிடுந் தலைவன்
திருமுறை மறையொலி செய்திடு மலர்வாய்
திருமுறை மறையொலி கேட்டிடுஞ் செவிகள்
சிவதலங் காணுந் திருமலர் நயனம்
சிவபூ சனையே செய்திடுங் கரங்கள்
சிவனடி நீங்காத் திருவமர் சிந்தையும்
தவமுறு நெறிசெலுந் தருமதே வதையாய்
வந்துநல் லாட்சி புரியுமா தவன்றன்
முந்துறு மாசியே முதலுறு துணையாய்
பத்தொடு முன்றெனப் பகர்தரும் ஆண்டினில்
இத்தினம் பொங்க லினியநன் னுளினில்
வந்திடுங் குமர குருபரன் வளரச்
செந்திலிற் செவ்வேள் திருவருள் செய்கவே

திருச்சிற்றம்பலம்

# பழி தீர்த்த பதி

திரு. T. B. சித்தலிங்கம் அவர்கள் M. A.,
தமிழ் விரிவுரையாளர்,
காசி இந்துப் பல்கலைக் கழகம், காசி,

ஒரு நாட்டின் பழக்க வழக்கங்கள், கருத்துக்கள், சமயக் கோட்பாடுகள் முதலிய பலவற்றை எடுத்து விளக்கும் கண்ணுடிகளாக அந்நாட்டு இலக்கியங்கள் திகழ்கின்றன. பிற்காலத்தைச் சேர்ந்தவர்களுக்கு, தொன்று தொட்டு நிகழ்ந்து வந்த செய்திகள், செயல்கள், இருந்து வந்த பழக்க வழக்கங்கள், கோட்பாடுகள் ஆகியவற்றை முற்காலத்திருந்த நூல்கள் தெளிவாகப் புலப்படுத்துகின்றன. தமிழ்நாட்டின் வரலாற்றை அறுதியாக வரைவதற்குச் சங்க நூல்கள் முதல் பிற்கால நூல்கள் வரை எந்த அளவுக்குத் துணையாக அமைந்தன என்பது அனைவரும் அறிந்த ஒன்று.

அதேபோல, சமயத்துறையிலும், சமயக்கோட்பாடுகளிலும் நெடுங்காலமாகச் சில கருத்துக்கள், நம்பிக்கைகள் இருந்து வந்திருக்கின்றன; இன்றும் இருந்து வருகின்றன; இவற்றுள் பலவற்றிற்குப் பொருள் இப்போது தெளிவாகப் புலப்படுகிறது; சிலவற்றிற்குப் புலப்படுவதில்லை. சமயக்கோட்பாடுகள், நம்பிக்கைகள் ஆகிய வற்றின் உண்மைகளைத் தெரிவிக்க, சமய இலக்கியங்கள் பெருந்துணை புரிகின்றன. அவற்றைக்கொண்டு நோக்கும்போது சமயக் கருத்துக்களினுடைய பழமையும் காரணமும் நன்கு புலனாகின்றது.

கவிஞன், தான் வாழும் நாட்டின் இயல்புகளையும், இயற்கையமைப்புக்களையும், பழக்க வழக்கங்களையும், கோட்பாடுகளையும் கருத்தில் கொண்டே தனது இலக்கியத்தைப் படைக்கிறான். தனது முன்னோர் மொழிந்த பொருள்களையும் மறப்பதில்லை. எனவே, ஓர் இலக்கியம், தனக்கு முன்னிருந்த இலக்கியங்களை ஓரளவுக்கு அடியொற்றியே செல்கிறது என்பது மிகையாகாது.

அண்மையில் வெளியான நூலொன்றினைப் புரட்டிப் பார்க்கும்போது, இவ்வாறு பல எண்ணங்கள் என்னுள் எழுந்தன.

இராமேச்சுரம் என்ற திருப்பதி தமிழ் நாட்டில் அமைந்துள்ளது. இமயம் முதல் குமரி வரை பரந்துள்ள இந்த நாட்டில், இந்து சமயத்தார் அனைவராலும் காசியும் இராமேச்சுரமும் இணைத்தே பேசப்படுகின்றன. காசிக்குச் சென்ற பயன் இராமநாதனைக் காணாவிட்டால் முற்றுப் பெறுவதில்லை என்ற கருத்தும் நிலவுகிறது. கங்கை நீர்கொண்டு வந்து இராமலிங்கரை முழுக்காட்டும் செயலும் நெடுங்காலமாக நடந்து வருகிறது.

இவற்றிற்கு என்ன அடிப்படை? இராமேச்சுரம் என்ற பெயரிலிருந்து அது இராமனோடு தொடர்புடையது என்பது பெறப்படும். ஆகவே இராம காதையில் இது பற்றிய குறிப்பு இருக்கலாம் என்று எண்ணினேன். அண்மையில் வெளியான இராமாயண (மலிவுப் பதிப்பு) மூலத்தைப் புரட்டினேன். திடுக்கிட்டேன்.

இராமன் சீதையோடு அயோத்தி திரும்புகிறான். வழியிலே பல இடங்களைச் சுட்டிக் காட்டுகிறான். அவற்றுள் சேதுவும் ஒன்று. சேதுவின் பெருமையைக் குறிப்பிடுகிறான்.

> ‘கங்கையோடு யமுனை கோதாவரி நருமதை காவேரி
> பொங்குநீர் நதிகள் யாவும் படிந்தலால் புன்மைபோகா
> சங்கெறி தரங்கவேலை தட்டஇச் சேது என்னும்
> இங்கிதின் எதிர்ந்தோர் புன்மை யாவையும் நீங்கும்அன்றே’ (22)

விமானம் மேலே செல்கிறது. இராமேச்சுரத்தைப் பற்றிய குறிப்பேயில்லை.

மிகைப்பாடல்கள் என்ற தொகுப்பில், மீட்சிப்படலத்தில் மட்டும் 301 பாடல்கள் தரப்பட்டிருந்தன. அவற்றுள் இராமேச்சுரத்தைப்பற்றிய குறிப்பு இருந்தது.

இராமேச்சுரத்தை வடநாட்டவரும் ஓர் உயர்ந்த திருத்தலமாகக் கருதுகின்றனர். எனவே அவர்களுக்கென ஏதேனுமோர் ஆதாரம் இருக்க வேண்டும். கம்பன், வால்மீகி முனிவருடைய

கதையைத் தமிழிற் கூறப்புகுந்தான். ஆனால் வான்மீகியோ சேதுபந்தனத்தைப் பற்றிக்குறிப்பிடுகிறாரே தவிர, இராமேச்சுரத்தைப்பற்றிக் கூறவில்லை.

வடநாட்டில் பொதுமக்களிடையே வழங்கும் இராமாயணம் துளசிதாசருடைய 'இராமசரிதமானஸ்' என்பதாகும். அதில் இதைப்பற்றிய குறிப்பு வருகிறது.

கடலைக் கடப்பதற்காக இராமன் அணையை அமைக்கிறான். நீலன் நளன் முதலிய வானரவீரர்கள் குன்றுகளையிட்டு வழி சமைக்கிறார்கள். "மிக அழகிய சேது உருவாகிறது. உடனே இராமன் கூறுகிறான்."

"இந்தஇடம் மிகவும் சிறந்தது; இதன் பெருமை அளவிடற் கரியது; இங்கே நான் சம்புவை (சிவபெருமானை) உருவாக்க விரும்புகிறேன். அவனைவிட என் உள்ளத்துக்கு விருப்பமானவர்கள் வேறு இல்லை." முனிவர்கள் எல்லாம் இதைக்கேட்டு அங்கே வந்து சேருகிறார்கள். சிவலிங்கம் முறைப்படி உருவாக்கப்படுகிறது. பிறகு இராமன், 'சிவனைப் பூசித்தவர்களுக்கு எனது உலகில் இடமுண்டு' என்றெல்லாம் கூறுகிறான். இன்னும், 'நான் நிறுவிய இந்த இராமேசுவரனை, யார் கங்கை நீர் கொண்டு பூசிக்கிறார்களோ அவர்களுக்குச் சாயுச்சியம் கிட்டும்........நான் கட்டிய சேதுவைத் தரிசிப்பவர்க்கு மறுபிறவி என்பதில்லை"– என்றும் குறிப்பிடுகிறான்.

சீதையோடு மீண்டு வரும்போது, இராமன் சேதுவையும் தான் நாட்டிய கோயிலையும் காட்டுகிறான். 'இங்கே சேதுவைக் கட்டி, சம்புவை நிறுத்தினேன்' என்று கூறுகிறான். இதுவே துளசிதாசர் குறிப்பிடுவது.

வான்மீகி முனிவர் கூறாதுவிட்ட செய்தியைக் கம்பன் குறிப்பிட்டிருக்கிறான். அவ்வாறாயின் அதற்கு அடிப்படையாது?

சமய இலக்கியங்கள் இங்கே நமக்குத்துணை செய்கின்றன. இராமேச்சுரம் சமயத்தொடர்புடைய தலம் ஆகலின், வேறு இலக்கியங்களை நாடுவதைவிடச் சமய இலக்கியங்களைத்துணைக் கொள்வதே பொருத்தமானதாகும்.

சமய இலக்கியம் (பக்தியிலக்கியம்) கி. பி. ஏழாம் நூற்றுண்டில் தொடங்குகிறது. பின்பு பன்னிரண்டாம் நூற்றுண்டு வரை இடையீடின்றி இயல்கிறது. கல்வெட்டுக்களிலும் சமயம் போற்றி வளர்க்கப்பட்ட செய்தி குறிப்பிடப்படுகிறது. ஏழாம் நூற்றுண்டில் வாழ்ந்த இருபெரியவர்கள் திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தரும் ஆவர். இருவரும் பல திருத்தலங்களுக்குச் சென்று பாடியிருக்கிறுர்கள். தமது பாடல்களில், அவ்வத்திருத் தலம் பற்றிய செய்திகள், வரலாறு, தோற்றம் முதலியன பற்றிக் குறிப்பாக எடுத்துக் கூறியிருக்கிறுர்கள். பல்வகை யாராய்ச்சிகளுக்கு இப்பாடல்கள் துணைசெய்கின்றன.

நான்காந் திருமுறையில் அப்பர் இராமேச்சுரத்தைப் பற்றிக் குறிப்பிடுகிறுர். 'திருமால் செய்த கோயில், அரக்கரை விழ்த்திய மால் செய்கோயில்' என்று அவர் கூறுகிறுர்.

"......உற்றவன் போர்க ளாலே உணர்விலா அரக்கர் தம்மைச்
செற்றமால் செய்தகோயில் திருஇரா மேச்சு ரம்........" (2)

'கடலிடை மலைகள் தம்மால் அடைத்துமால் கருமம் முற்றித்
திடலிடைச் செய்த கோயில் திருஇரா மேச்சுரத்தை........' (3)

'வரைகளோத் தேயுயர்ந்த மணிமுடி யரக்கர் கோனை
விரையமுற்(று) அறவோ டுக்கி மீண்டுமால் செய்த கோயில்
திரைகள்முத் தால்வ ணங்குந் திருஇரா மேச்சு ரத்தை........ (10)

பத்துப் பாடல்களிலும் இராமன் அரக்கரை வீழ்த்தி, பின்பு இக் கோயில் நாட்டிய செய்தியை வாகீசப்பெருமான் குறிப்பிடுகிறுர். என்றுலும் இக்கோயில் எடுப்பிப்பதற்கான காரணத்தை அவர் குறிப்பிடவில்லை.

அவர் காலத்தவரான திருஞானசம்பந்தப் பெருமான், அந்தக் காரணத்தைத் தெளிவாக விளக்குகிறுர். இலங்கையிலிருந்து மீண்டுவரும்போது இராமன் செய்த கோயில் இது என்பதோடு, அதற்கான காரணம், இது என்று அவர் புலப் படுத்துகிறுர்.

தேவியை வவ்விய தென்னிலங் கைத்தச மாமுகன்
பூவிய லும்முடி பொன்றுவித் தபழி போயற
ஏவிய லும்சிலை யண்ணல்செய் தஇரா மேச்சுரம்........' (2)

'அணையலை சூழ்கடல் அன்றடைத் துவழி செய்தவன்
பணையிலங் கும்முடி பத்திறுத் தபழி போக்கிய
இணையிலி யென்றுமி ருந்தகோ யில்இரா மேச்சுரம்...... (6)

'சனிபுதன்................
முனிவது செய்துகந் தானை வென் றவ்வினை முடிட
இனியருள் நல்கிடென் றண்ணல்செய் தஇரா மேச்சுரம்...... (7)

'........ஏக்கிய லுஞ்சிலை யண்ணல்செய் தஇரா மேச்சுரம்........ (10)

இராவணனைக் கொன்ற பழி தீருவதற்காக இராமன் இந்தக் கோயிலையமைத்தான் என்பது திருஞானசம்பந்தர் திருவாக்கு.

இராவணன் ஓர் அந்தணன். அந்தணனைக் கொன்ற பழி தீர்வதற்காக இராமன் இந்தக் கோயில் எடுப்பித்தான். அவ் விடத்திற் செய்த பூசையால் அந்தப் பாதகம் தீர்ந்தது. பிற் காலத்து வந்த சேக்கிழார் இந்தச் செய்தியை எடுத்துரைக்கிறுர்.

'புண்ணியனுர் நெல்வேலி பணிந்து போற்றிப்
புரிசடையார் திருப்பதிகள் பிறவும் சென்று
நண்ணியினி தமர்ந்தங்கு நயந்து பாடி
நற்றெண்டருடன் நாளும் போற்றிச் செல்வார்
விண்ணவரைச் செற்றுகந்தான் இலங்கை செற்ற
மிக்க பெரும் பாதகத்தை நீக்க வேண்டித்
திண்ணியபொற் சிலைத் தடக்கை இராமன்
செய்த திருவிரா மேச்சுரத்தைச் சென்று சேர்ந்தார்.'

(திருான – 887)

'செங்கண்மால் வழிபட்ட கோயில் நண்ணித்
திருமுன்பு தாழ்ந்தெழுந்து................ (888)

'சேதுவின்கட் செங்கண்மால் பூசை செய்த
சிவபெருமான் தனைப்பாடிப் பணிந்துபோந்து........ (889)

இவ்வாறு திருத்தொண்டர் புராணம் கூறுகிறது.

பின்னர் வந்த கம்பன் இந்தக் கருத்துக்களையெல்லாம் மனத்தில் இருத்தி, மீட்சிப் படலத்தில், இராமேச்சுரம் அமைந்த கதையைக் கூறுகிறான்.

சீதையோடும் பிறரோடும் புட்பக விமானத்தில் அயோத்தி திரும்பும் இராமன், வழியில் பல இடங்களைச் சீதைக்குக் காட்டு கிறான். சேதுவைக் காட்டி, அதன் பெருமைகளைக் குறிப்பிடு கிறான்.

'அந்தணர் தம்மைக் கொன்றோர், அருந்தவர்க்கு இடுக்கண் செய்தோர்'....

முதலிய எல்லாப் பாவங்களைச் செய்தவர்களும் 'தென் திசை வந்து சேதுவைத் தரிசிக்க, தீரும்.' என்று கூறுகிறான். நன்றி கொன்றமை தவிர மற்ற எல்லாப்பாவங்களும் இங்கே தீரும்' என்றும் குறிப்பிடுகிறான்.* உடனே சீதை, "தீங்கனுகும் செய்ந் நன்றி மறந்திடும் தீமனத்தோர்கள், தாங்கரும் பாவங்களையும் எனக்காகத் தவிர்க்க' என வேண்டுகிறாள். இராமனும் 'அங்ஙன மேயாக' எனவிதிக்கிறான்.

பிறகு, பொன்பொரு விமானம் தன் மேல் போகிறது.

"முன்பெல அரக்கன் தன்னை முனிகொலை தொடரக் கண்டாங்கு
அன்பினால் அரிபால் தோன்றும் அரனை அரிச்சித் தாலன்றித்
துன்பமே தொடரும் பொல்லாச் சூழ்கொலை தொலையா தென்றுங்கு
இன்புறும் இராமன் வேலைக்கு இல்புறத்து இழிந்து நின்றான்"

"வேந்தர் வேந்தனும் வேலையின் கரையினில் வரவே
வாய்ந்த சாய்கையும் வந்தது... " (சாய்கை – நிழல்)

பிறகு அது சிறிது அகன்று நிற்கிறது.

---

* இங்கே,

"ஆன்முலை யறுத்த அறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென"

'நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்'
செய்தி கொன்றோர்க்கு உய்தியில்லென
அறம்பாடிற்றே'

என்ற 'புறநானூற்றுப்பாடலை' நினைவு கூர்தல் தரும்.

"........பூங்கழல் இராகவன் சாய்கை
அகன்ற காரணம் குறுமுனி உரைசெய........"

"இந்த மாநகர் தன்னிலே இறைவனை யருச்சித்து
உன்தன் மாநகர் எய்தினுல் சாய்கைபோம் உரவோய்"

என்ருர் அகத்தியர்.

ஆகவே, இராமன் அங்கே சிவபூசை செய்ய எண்ணி, சிவலிங்கம் கொண்டுவருமாறு அநுமனை யனுப்புகிருன். அநுமன் வருவதற்குள் முகூர்த்தம் தவறவிடக்கூடாதென்று இராமன் மணலில் இலிங்கம் அமைத்துப் பூசை செய்தலும், அநுமன் திரும்பிவந்து அந்த விலிங்கத்தைப் பெயர்க்கமுயன்று தோற்றமையும் அனைவரும் அறிந்த கதையாகும்.

எனவே, தனக்குமுன்னிருந்த பெரியோர்கள் கூறிச்சென்ற கருத்துக்களைத் தொகுத்தே கம்பன் தனது காப்பியத்திற் குறிப்பிடுகிருன். இராமன் சிவன் கோயில் ஒன்று எழுப்பிய காரணத்தைத் தெளிவாகக் காட்டுகிருன். துளசிதாசரைப் போல் முன்பே சமைத்ததாகக் கூறவில்லை. இதற்குக்காரணம், சம்பந்தர், அப்பர், சேக்கிழார் முதலியோர் முன்பே கூறிச் சென்றிருந்தமையும் நாட்டில் வழங்கிவந்த கோட்பாடுகளுமே யாகும்.

"கம்பன், தமிழ்நாட்டின் சமுதாய நிலையையும் நாகரிகத்தையும் பண்பாட்டையும் நன்கு தெரிந்தவன்.......கம்பன்தனது காவியத்திலே சொல்லிவருகின்ற செய்திகளெல்லாம், தன் காலத்தில், தான்வாழும் நாட்டில், நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் பழக்க வழக்கங்களையும் அடியொற்றியவையாகும்..." (கம்பன், பாலகாண்டம், பதிப்புரை, பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை யவர்கள்)

"சிலபிரதிகளில் மட்டும் காணப்பெறுவனவும் கதைப் போக்கிற்கு இயைபு இல்லாதனவும், பொருட்சிறப்பற்றனவும், நிச்சயமாக இடைச்செருகல் என்று தெரிவனவுமாகிய பாடல்கள்

'மிகைப்பாடல்கள்' என்னும் தலைப்பின்கீழ், அந்த அந்தக் காண்டங்களின் இறுதியில் அமைக்கப்பெற்றுள்ளன.........."

(மேற்படி பதிப்புரை)

முன்னோர் மொழிபொருளைப் பொன்னேபோற் போற்ற வேண்டும் என்ற கருத்துக்கிணங்க, கம்பன், இக்கதையை எழுதியிருக்கிறான். கம்பன் வாழ்ந்த காலத்திலும், அதற்கு முன்பும், இராமேச்சுரம் பற்றிய இந்தக் கருத்துக்கள் நிலவி வந்தன என்பதற்கு மேற்குறித்த இலக்கியங்களே சான்று. ஆகவே, இந்தக் கதையை, இந்தக் கதைபற்றிய பாடல்களை, 'மிகைப்பாடல்கள்' என்று பதிப்பாளர் ஒதுக்கியிருக்கவேண்டியதில்லை.

உயிர்களாகிய பசுக்களுக்குத் தலைவன் இறைவன்; எனவே அவன் பசுபதி என்று கூறப்படுகிறான். பசுபதி, பசுக்களின் பழிகளையும் நீக்கும் பதியாக, இராமேச்சுரத்தில் நிலைகொண்டிருக்கிறான். அந்தப் பழிதீர்த்த பதியை யேத்தி வழிபடுவோமாக.

---

" கத்வல் பட்டயங்கள் " – கட்டுரையில்............

இவ்விதழ் 22-ம் பக்கம் முதல் பத்தியை அடுத்துப் பின் வரும் குறிப்பைச் சேர்த்துப் படிக்கக் கேட்டுக் கொள்கிறோம்.

"உரகாபுரியாள் தலைவா தாலோ தாலேலோ"– என்று ஒட்டக்கூத்தர் பாடிய குலோத்துங்கன் பிள்ளைத் தமிழிலும் (பக்கம் 51) உரகபுரம் குறிக்கப் பெற்றுள்ளது. (மு. ரா. "ஆழ்வார்கள் கால நிலை" பக்கம் 115.)

ஆசிரியர்.

# நிறையின் பண்பும் ஞான நலனும்

சுவாமி பரமாத்மாநந்தா அவர்கள்,
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், மைலாப்பூர் — சென்னை.

பண்டொருகால் இப்பத்திரிகையின் இதழ் ஒன்றில் இந்து மாதரின் இல்லற வாழ்வின் குறிக்கோளைப்பற்றி எழுதுங்கால், இல்லக்கிழத்தி கணவனைக் காதலனுகக்கருதி இன்புற வாழ்வ தினும் மேம்பட்ட குறிக்கோளாவது, கொழுநனை மனிதனுகக் கருதாது யாண்டும் தெய்வமாகத் தொழுது வாழ்தலே என்பதை வற்புறுத்தலானேம். இல்லற வாழ்வும் ஞான வாழ்விற்கு ஒரு படியே ஆவதை மறத்தலின் ஊங்கில்லைகேடு என்பதை உள்ளத்தே வேருன்றச் செய்தல் பலர்க்கும் இன்றியமையாத தாகும். மற்றீண்டு வாரா நெறியாய வீட்டுநெறியிற் செல்லும் விழைவுடையார்க்குக் காம அவா பெரிதும் இடையூருகும் என்பதும், இறைவனையன்றி வேறெதனையும் வேறெவரையும் இன்ப மளித்தற்கு உற்றதுணையென ஒருப்படல் கணவனைத் தெய்வமாகக் கருதும் குறிக்கோளுக்கு முரணுகும் என்பதும் எளிதே சிந்தனையாளர்க்குப் புலப்படும் விழுமிய உண்மைகளாம். தெய்வ நினைவும் காம விழைவும், ஒளியும் இருளும் போல், ஒருங்கே உள்ளத்திலே அமரவொண்ணுதனவாம் என்பது மெய் யுணர்ந்தாரது மிடுக்குற்ற வாக்காகும். தனக்கென வாழாது கணவனுகிய இறைவற்கெனவே வாழும் பெருந்தகை வாய்ந்த இந்து நங்கைக்கு வாழ்வு எப்பொழுதும் மலையேற்றம் போன்று வருத்தமிக்கதேயாம் என்பதில் எள்ளளவும் ஐயமின்று.

ஆனல் மேற்றிசை நாகரிகப் புயல் நமது நாட்டின்மீது இடையருது வீசிவருதலின், நம்மவர்க்கும் பண்டைய குறிக் கோள்களின் விழுப்பம் புலப்படாது போவதுமன்றி, அம் மக்களின் பண்பாட்டை நயத்தக்கதென மயங்கி நனிவிரும்பி அதைப் பின்பற்றும் சீர்குன்றியநிலை நம் நாட்டிலே கடுகிவரு

கின்றது. இக்காலப் பொறுப்பற்ற எழுத்தாளர் சிலர், இந்து மத இல்லற நெறியின் குறிக்கோள் வீணாகவும், இயற்கைக்கு முரணாகவும் அளவுகடந்த கடுமையுடையதாகின்றது என்ற கருத்தினைப் பெருமுயற்சியொடும் பரப்பி வருகின்றனர். கற்பு நெறியினைக் கூசாது கண்டிக்கும் அளவிற்கு அன்னார் இழிநிலை எய்தவில்லை என்பதையும் மறுக்காது ஒப்புக்கொள்கிறோம். ஆனால், ஒருமாதிற்குத் தன் கணவனை யொழிந்த ஏனைய ஆடவர்களொடு நண்பர்களாக உறவாடி மகிழ்வெய்தலும், அங்ஙனமே ஓர் ஆடவனும் தன் மனைவியோடன்றிப் பிறமகளிரொடு கெழுதகைமையாரப் பழகிக்களிப் பெய்தலும் பொருந்தும் என்பர். உடலைமட்டும் மணஉறவிற்கு இயைய உரிமையாக்கி, நெஞ்சம் திருத்தி யெய்தற்காகப் பரந்த விரிந்த கேண்மையைப் பிறரிடம் நாடலில் இழுக்கிலை என்று இயம்புவர். மேலைநாட்டு மக்களிடத்துக் காணப்படும் மதிமயக்கம் நமது மக்களிடமும் ஊர்ந்து பெருகி வருகிறது என்பதற்கே இது சான்றாகும். இல்வாழ்விற்குரிய கற்புநெறியனைய சிறப்புற்ற குறிக்கோள்கள் வேறு உள எனுங்கால், இத்தகைய மாசுற்ற நெறியைக் கனவினும் கருதல் ஏதமே விளைக்கும். எஞ்ஞான்றும் எவரிடத்தும் எந்நிலையிலும் நிறையினின்றும் வழுவாத நேர்மை இன்றியமையாததே. விதித்த முறையினைப் புறத்தளவாகப் பின்பற்றி, அதனை அகத்தே ஊன்றி நிலவச் செய்யா தொழியின், அதுபடிற்றொழுக்கமாகவே முடியும் என்பது ஒருதலை. இருபாலாரும் நிறையெனும் அங்குசம் நிமிராதவாறு பாது காக்க வேண்டும் என்பதும், கொட்பின்றி ஒல்லும்வா யெல்லாம் நிறையினை உள்ளத்தே வீற்றிருக்கச் செய்தல் வேண்டும் என்பதும், உள்ளங்கை நெல்லிக்கனியெனத் தெள்ளிதில் விளங்கும்.

இல்லவரம்பிற்கும் இரத்தக் கலப்பிற்கும் உட்பட்ட உறவு முறைகளேயன்றி ஆண்கட்கும் பெண்கட்கும் வேறுசில உறவுகளும் இருத்தல் இயலும். இருபாலாரும் ஒருவரை யொருவர் மனமாகவோ ஆன்மாவாகவோ கருதுவதால், பால்வேற்றுமையைப் புறக்கணித்தலும் இயலும் – இது அறிவாற்றலோ ஞானஉரனோ முதிர்ந்தார்க்கே கைகூடுவதாகும். பால்வேற்று

மையை உணர்ந்தே ஒரு மாதினை இன்பூட்டியாகவோ, அன்னை யாகவோ, உடன்பிறந்தாளாகவோ நினைதலும் ஒல்லும். மேலை நாடுகளில் ஆண்கட்கும் பெண்கட்கும் இடையே நிகழும், இல்லவரம்பிகந்த தொடர்புகட்கு அடிப்படையாக உறுதியொடு நிற்பது, மாதினை இன்பமூட்டியென எண்ணும் கருத்தே. மாது பெண்மை வடிவேயாகிருள், ஆண்மைவடிவினை நிரப்பும் பகுதி யாகவே அமைகிருள். பெண்மையை மேலைநாட்டார் பாது காத்தற்குரிய ஒரு பொருளாகக் கொள்ளார். அதற்குமாருக, ஆணுக்கு ஊக்கமளித்து இன்பம் ஊட்டும் பகுதியாகவே கருதப் படுகிருள். ஆணிற்கு ஆவேசத்தை ஈந்து, அவனை மகிழ்விக் கும் நுண்ணிய சத்திச் சூழ்நிலையாகிருள்; ஆணின் உள்ளத் திற்குச் சத்தியை ஊட்டி, அதன் குறையை அகற்றுகிருள். ஆனல் இந்துவோ ஆணுக்கும் பெண்ணுக்கும் உள்ள இத் தொடர்பை நேர்மையானதென்ருே, அறுதியான நலத்தைப் பயப்பதாகவோ நம்புவதில்லை; உணர்ச்சித்தீயை மூட்டி ஊறு விளைவிக்க இடங்கொடாத ஓர் உறவை - அதாவது, ஒருவர்க் கொருவர் பெற்ருேர் எனும் முறையை - வளர்க்குமாறு போதிக் கிருன். மேலை நாட்டிலே, ஒருத்திக்குத் தன் கணவனல்லாத பிறஆடவர்க்கு ஊக்கமூட்டி இன்பத்தை நல்கும் உரிமை உண்டு; அங்ஙனமே ஓர் ஆணும் தன் மனைவியல்லாத பிற மாதரிடம் அதனையே எதிர்பார்த்து நிற்கின்ருன். இந்நெறியிற் செல்லவிடாது தடைசெய்து தனக்குரிமையாக்கும் கணவனை அவனது மனைவி கொடுங்கோன்மைக் குற்றத்திற்கு உள்ளாக்கு வாள். இந்நாட்டில் அது நிகழ்வதன்று; அத்தகைய உரிமை பாவமும் பழியும் என்றே கருதப்படும். இங்கே கணவனும் இல்லக் கிழத்தியும் தமக்கேயுரியராவர். இது குறையா, நிறையா?

நுண்ணுணர்வுற்ற இந்துவோ ஆழ்ந்த கூரிய நோக்கினை உடையானுதலின், பொருள்களை ஊடுருவிப்பார்த்து ஆழம்வரை ஆராயும் பெற்றியனுவான். மாதர்க்குரிய இன்பூட்டும் சத்தி நுண்ணிய பரந்த நிலையிலே கிளரும் பாலுணர்ச்சியின் விளைவே யன்றி வேறில்லை யென்பதைத் தெளிவுறக் காண்கின்ருன்; அச் சக்தி ஆணின் உள்ளத்தே தாக்கும்போது விளைக்கும் செயல்கள்

மேலெழுந்த பார்வைக்கு ஊக்க முட்டுவதாகத் தோன்றினும், அடிப்படையிலே நுண்ணியதான பால்வேற்றுமையுணர்ச்சி யினின்றே எழுவதாகும். வாழ்வு நிறைவெய்துதற்கும் மெய் யுணர்வைப் பெறுதற்கும் மனிதன் காம நினைவை வேரொடு மாய்த்து அதற்கப்பாற் செல்லல் வேண்டும் என்ற நம்பிக்கை யுடையார் நம்மவர்; ஆதலின் ஆராயாது ஆணும் பெண்ணும் கூடியிருந்து மகிழ்ச்சியெய்தல் தீங்கிழைப்பதாகும்; அன்றியும், இல்வாழ்வும் போதிய அளவிற்குத் தூயதாகாது, விரும்புதற் குரியதுமாகாது; பாலுணர்ச்சியற்ற நட்பாக அது உயர்நிலையை அடைதல் இன்றியமையாததாகும். இந்நாட்டினர்க்கு மங்கையர் பால்வேற்றுமை கடந்தவராகத் தோன்றல் வேண்டும்; அன்றேல், காம உணர்ச்சியினுல் மாசுருத வடிவத்திலே - அதாவது அன்னை வடிவத்திலே - காட்சியளித்தல் வேண்டும். இந்துக்களின் வாழ்வுக் குறிக்கோளின்படி, ஆண்-பெண் உணர்ச்சியை அறவே ஒழித்தல் ஞானப் பேற்றுக்கு முன்னரே செய்து முடித்தற்குரிய இன்றியமையாத சாதனமாகும் என்று நூல்கள் நுவலுகின்றன. இந்துக்களின் கூரிய நோக்கு அனைத் தையும் துளைத்து அடிவரை காணும் இயல்பினதாதலானே, பொருள்களின் புறத்தோற்றத்தால் திருத்தியுறுவதில்லை. இயல்பான வாழ்வெனப்படும் ஒன்றின்மீது அறுதி நிலையெனும் முத்திரையை அடித்தற்கு அது மறுக்கின்றது. 'இயல்பானது' என்பது நிலையுதல் இல்லாத ஒன்றையன்றி வேறெதனையும் குறியாது. நிலையானதொன்றிற்கே உண்மையில் இயல்பான தெனும் பெயர் ஏற்புடைத்தாகும். நமது இப்போதைய நிலை மாருத தொன்ரு? அன்றேல் அதனை மாற்றலும், உருவாக்கலும், பயிற்றலும் வேண்டப்படுவனவாகும். வெளிப்பார்வைக்கு ஆற்றலையூட்டுவதும் அழகார்ந்ததும் ஆன பெண்ணினத்தார் சத்தியென்பது, இயல்பானதெனப்படும் வாழ்வினைப் பற்றிய வரைக்குமே உண்மையாகும்; இவ்வாழ்வோ பெரும்பான்மையும் உடலைச் சார்ந்ததாயும், ஒருவாறு அறிவைச் சார்ந்ததாயும், மிகச் சிறிய அளவிற்கே ஞானத்தைச் சார்ந்ததாயும் அமைவ தாகும். ஊக்கத்திற்கும் உவகைக்கும் தாயகமானதெனக் கருதப்படும் பெண்மையைப்பற்றிய உணர்ச்சியே அவளது பால்வேறுபாட்டின் உணர்ச்சியை அடிப்படையாகக் கொண்ட

தாதலின், அவளது முன்னிலையில் மனிதனது பாலுணர்ச்சி நேராகவோ சுற்று வழியிலோ தூண்டப்படுவதாகும். ஆண்-பெண் கவர்ச்சிகள் படைப்பிற்கு வேராயமைந்தன; அண்ட முழுதும் கரந்தும் பரந்தும் உள்ள மயக்கத்தின் அமைப்பினைச் சார்ந்தனவாகும். நாம் இவ்வுலகிலே அல்லலுழப்பதேன்? நம்மை அறியாமை சூழ்ந்திருப்பதேன்? நாம் ஆற்றல் குன்றியிருப்பதேன்? இவ்வினுக்கட்கு இருடியர் அளிக்கும் விடை ஒன்றேயாம். நமது மெய்யான ஆன்ம இயல்பினை மறந்து, உடலோடும் மனத்தோடும் ஒன்றித்து நிற்பதே. நம்மை இத்துணை மயக்கத்திற்கு உள்ளாக்கியது யாது? மாயையே; அதற்குக் காமம் பொருணசை யென்னும் இரு வடிவங்கள் உள்ளன. அவ்விரண்டிலும் முன்னதே வலிமை யிற் சிறந்தது. படைப்புக்கும், பால்வேற்றுமைக்கும் பாலுணர்ச்சிக்கும் வேராயிருப்பது இக்காமமே. அது வெளிப்பார் வைக்குத் தோன்றுவது போன்றே அத்துணை மேற்பரப்பிலே மிதப்பதொன்றன்று. அது உள்ளத்தின் ஆழ்ந்த மட்டங்களிலும் வேரைப் பரப்புகின்றது. ஆண்கட்கும் பெண்கட்கும் ஒரு பாலார்க்கு மற்றொருபாலார் முன்னிலையில் தோன்றும் உவகை யும் ஊக்கமும் அடிப்படையான நெஞ்சப்பிணியின் விளைவாகக் கிளர்வனவேயாம். இவ்வாறு பகுத்துரைத்தல் கற்பனையன்று, கண்டிப்பான உண்மையேயாகும். உள்ளப்பகுப்பு நூலார் அதனை ஒருவாறு மெய்ப்பித்துள்ளனர். எனினும், மெய்ப் பொருளையும், ஆன்மாவையும் உணர நெஞ்சாரப் பாடுபடுவார் அனைவரும் அவ்வுண்மையைத் தமக்குத்தாமே மெய்ப்பித்துக் கொள்ளவல்லாராவர். இக்காரணம் பற்றியே ஆழிசூழ் உலக மெங்கணும் ஆழ்ந்த ஞான விழைவுடையார் அனைவரும் துறவறத்தே நாட்டமுடையராஞர்; துறவியர் எனைத்தானும் எவ்விதக் காம நுகர்ச்சிக்கும் (செயலாலும், வாக்காலும், நினைவாலும்) இடங்கொடாத தூய்மையை அவாவினர். 'தலைப் பட்டார் தீரத் துறந்தார்' என்றும், 'வேண்டின் உண்டாகத் துறக்க' என்றும், 'விடல் வேண்டும் வேண்டிய வெல்லாம் ஒருங்கு' என்றும் திருவள்ளுவப் பெருந்தகையார் கூறி, 'துறவு' என்னும் அதிகாரத்தை 'மெய்யுணர்தல்' எனும் அதிகாரத்திற்கு மு[illegible]தனர். இவ்வுண்மையினை நன்

குணர்ந்தே இந்திய ஞானியர் சமுதாய வாழ்க்கையில் ஆண் களும் பெண்களும் தங்குதடையின்றி நெருங்கியுறவாடுதலைத் தடுத்தனர்; ஆண்மகன் ஒருவனுக்குத் தன்மனைவியல்லாத பிற மாதரோடு இணங்கி, அறத்திற்கு மாறான இழிதக்க இன்பத்தைப் பெறுதற்கு எவ்வித அமயத்தையும் நல்க மறுத் தனர். ஆடவர்க்கும் மகளிர்க்கும் இடையே எழும் கெழுதகை மையை அக்கேண்மைக்கெனவே போற்றுவாரல்லர் நம்மனோர்; நட்பும் கொட்பின்றி ஊன்றுதல் வேண்டும் என்று வரையறுத் தார் மேலோர். அவ்வாறு பழகுதலின் நோக்கம், நல்லறிவு பெறுதலோ, ஞானப்பேறோ அன்றாயின், விலங்கியலைச் சாரும் காம மகிழ்ச்சியே பொய்யான நல்லுருவம் பெற்றுப் பசுத்தோல் போர்த்த வெம்புலிபோல் நடிப்பதாம்; கேண்மையெனும் பெயர் பெறும் அது புண்ணை மறைக்கும் பொன்னுடை போன்ற தாம்; அத்தகைய ஒழுக்கம் இழுக்குற்றதேயாகும். அறியாமை மயக்கம் எனும் தளைகளை வலிவுறுத்துவதாகும். உண்டா ரிடத்து அன்றிக் கள் காமம்போல் கண்டாரை மகிழ் செய்வ தில்லை யென்பர் குறள் நூலார். கண்டாரை மகிழ்விக்கும் இழிதக்க காமம் கடியற் பாற்றே. வாழ்வின் மெய்ப்பயனை வேண்டுவார் அறியாமைத் தளைகளை நொறுக்கவே முயல்வர். ஆடவர்க்கோ மகளிர்க்கோ நிறை எனும் பண்பு எத்துணை விழுமியது என்பதனை ஓர்தல் வேண்டும். "பிறன்மனை நோக்காத பேராண்மை" யென்று சிறப்பித்தார் பெரியார்; காமநினைவுக்கும் இடந்தராமையைக் கழிபேராண்மை யெனவும், சான்றாண்மை யெனவும் பகரலாம். நிறையென்பது உடற்செயலைத்தவிர்த்தல் மட்டுமன்று; அது சிறப்பாகப் பெரும்பான்மையாக உள்ளத்தை அடக்கி வைத்தலாகும். பலப்பல வடிவங்களைக் கொண்டு அடரும் காமவிழைவின் (உள்ளத்தே கரந்து நிற்கும்) மயக்கத் தைப் புல்ல மறுத்தலே நிறையாம். ஒன்றேயான பரம்பொருளை நோக்கி மனத்தை உயர்த்தி நிறுத்தலே நிறையாம். ஒன்றை மறைத்துப் பலவாகக் காட்டுவது படைப்பு; அது இனம் பெருக்குதல் வாயிலாகப் பல்லூழிக்காலம் நிலைத்து வருகிறது. இதற்கு எதிர்த்தட்டாவதே ஒன்றும் பரம்பொருளைக் காணல். "பரத்தை மறைத்தது பார் முதற் பூதம்" என்றது படைப்பைப்பற்றிய உண்மை, 'பரத்தின் மறைந்தது பார் முதற் பூதமே' என்ற அடுத்த அடியில் திருமூலர் ஞான

நிலேயினை நவில்கின்றனர். உண்மை ஞானந்தெளிந்தவர் ‘ நன்மங்கையரைத் தாய்போற்’ கருதுவர்; மகளிரொடு நெருங் கிப்பழக நேருங்காலும் அவரைத் தேவியின் கூறுகளாகக் கருதி வழிபட்டுப் பணிசெய்யும் மனப்பான்மையைப் பேணி வளர்ப்பர் – இது எப்பொழுதும் புறத்தே புலப்படல் வேண்டும் என்பதில்லே. எவ்விதத்தும் காம நினைவைத் தூண்டாத ஒரு தொடர்பே கொள்ளத்தக்கதாம்; பெண்ணைப் பெண்ணுகவே கருதி ஈடுபடும் மனப்பான்மை – மேற்றிசை மக்களிடத்துக் காணப்படுவ தொன்று - ஒப்புக்கொள்ளத் தக்கதன்று. மனதில் உணர்ந்து செயலாற்றும் பகுதியிலும், உணர்வு கரந்துள்ள பகுதியிலும், நினைவு சொற்செயல் மூன்றிலும், நிறையெனும் பண்பு நிலேநாட்டப்படல் வேண்டும் என்பதே நினைவுறத்தக்கது.

முற்கூறிய வற்றினின்றும் தெளியக்கிடப்பது யாதெனின் நிறையெனும் குறிக்கோளே இம்மியேனும் மாசுறுத்தும் எதனையும் இந்துக்கள் போற்ற இசையார் என்பதே. பாரத நாட்டுக்குரிய பழம் பெரும் குறிக்கோள் நிறையென்பதே; அதனை உயிரினும் பெரிதா ஓம்பும் உறுதிபடைத்தவர் நம்மக்கள். இச்சைபற்றித் தாமாக அதனைப் பாராட்டுபவரல்லர் நம் பெரியார்; நிறை யொன்ருல் மட்டும் மனிதன் மெய்யுணர்வு பெற வல்லானுவன் எனும் உண்மை யறிவையே ஆதாரமாகக் கொண்டுள்ளது அவர்களது செயல். உலவாப் பரம்பொருளே நாட விரும்பும் எம் மனிதனுக்கும் எந்நாட்டினுக்கும் அக்குறிக்கோளின் சிறப்பைக் குறைத்தல் இயலாது. இந்து சமயத்தைப் பற்றும் தனி மனிதனுக்கும் நாட்டிற்கும் வாழ்க்கையின் மெய்ப்பயன் மெய் யுணர்வெய்துதலேயாம். இது பற்றியே நிறையெனும் குறிக் கோளே இந்து நெஞ்சார அணைத்து, அதனை அரும்பெறல் நிதி யெனப் பாதுகாப்பான். மேற்றிசையார் தனிவாழ்க்கையிலோ தொகுதி வாழ்க்கையிலோ, பொதுவாக நோக்குங்கால், அத்த கைய மிக உயர்ந்த நிலேயைக் குறியாகக் கொள்வாரல்லர். இம்மைப் பேறுகளேயும் அறிவாற்றலால் இயற்றக்கூடியவற்றை யுமே பெரும்பாலும் வற்புறுத்தி வாழ்கின்றனர். மேலே நாட்டு நாகரிகம் ஆய்ந்துரைக்குங்கால், மிகவுயர்ந்த நிலேயிலும் அறிவுத் துறையையே பற்றியதாகிறது; அது இந்து நாகரிகத்

தைப்போன்று ஞானத்துறையைச் சார்ந்த விழுமிய நாகரிக மென இயம்புதற்கு வழியில்லை. ஆதலானே மேலை நாட்டினர் நிறையெனும் பண்பிற்குப் பெருஞ்சிறப்பை அளிப்பதில்லை. சிற்றின்பத்திலே நாட்டமுடையார்க்கு நிறை யென்பது பய னுடையதாகத் தோன்றுவதில்லை. ஆனால் இன்ப நுகர்ச்சியைத் துறப்பார்க்கோ, அதன் பயனாக மெய்ஞ்ஞானப் பேற்றிற் கருத் தூன்றியிருப்பார்க்கோ, அது இன்றியமையாத பண்பாகும். இத் துறையிலும் மேலைநாட்டினரைப்பார்த்து நடிக்கத் தொடங்குவோ மாயின், அவர்களது தகுதியற்ற கருத்துகளைப் பற்றி ஒழுகத் தலைப்படின், நமது மேன்மையார்ந்த குறிக்கோளை இழப்பது மட்டுமன்றி, உரன்குன்றி, என்பிலா உயிர்களின் வாழ்விற்கு இழிந்துவிடுபவராவோம்; ஞானவீரஞ் சிதைந்தவராவோம்.

பெண்மையழகெனும் வெயிலைப் பெறுதபோது, மனிதனது உள்ளத்து அடங்கியுள்ள சத்திகள் முழுமலர்ச்சியை யடையாது போம் என்றும்; ஒவ்வோர் ஆண்மகனது நெஞ்சத்தும் மாதரது முன்னிலையில் எழும் பிரியத்தையும் இன்பத்தையும் சுவைக்கும் அவாவொன்று உள்ளத்துக் கரந்துறைந்து, அதனை நிரப்பும் அமயத்தை எதிர்பார்த்துத் துடித்துக்கொண்டிருக்கின்றது என்றும், அத்தகைய மனத்திருத்தி இல்லா தொழியின் உலக வாழ்வே வறண்டதாகி, சுவையற்றதாகி, நிறைவற்றதாகி வறி தாகும் என்றும், சத்திகள் தேய்ந்துமாயும் என்றும் உலகியற் சார்புடையார் வழக்காடுதலையும் உணர்வோம். வாழ்க்கை பழக்கப் பெண்மையின் சத்தி ஒருவாறு வேண்டியதென்பதை ஒப்புக்கொள்ளுவதாகவும் வைத்துக் கொள்வோம்; பெண்ணை உடலாகவும் மனமாகவும் கருதுதலும், (எத்துணைப் பண்பட்ட) இன்பமூட்டும் பொருளாகக் கொள்ளலும் நலம்பயக்கும் என்னி னும், அவளை ஞானநிலையினின்று நோக்கிச் சத்திதேவி யென வழிபடும் மனநிலை அதனினும் ஆயிரம் மடங்கு ஆன்ற பயனை நல்கும் என்பதை எவரே மறுப்பார்? சுவாமி விவேகானந்தர் தமது கடிதம் ஒன்றிற் பின்வருமாறு வரைந்தருளுகிறார்: "சத்தி தேவியின் (பெண்ணின்) அருளின்றி எதனையும் இயற்றுத லாகாது. அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் காண்பது யாது? சத்தி வழிபாடே. ஆயினும் ஐம்புல இன்ப நுகர்ச்சி வாயிலாக

அறியாமையால் அவர்கள் சத்தியை வழிபடுகின்றனர். அத்தேவி யைத் தூயநெஞ்சொடு சாத்துவிக நிலையில்நின்று, தேவி யன்னை யாக நோக்கி வழிபடுவார் எத்துணைப் பேரளவான நலனை எய்துவர்?'' ஒரு பெண்ணின் உடல்நலத்தையும் இளமை நலத்தை யும் மறைவாகவேனும் குறியாகக் கொள்ளும் ஒழுக்கத்தினும், பெண்ணை அன்னையாகக் கருதி நடத்தல் அவளுக்கு மிக்க மதிப்பையும், ஆண்கட்குப் பேருதவியையும் அளிக்கு மன்றோ? நெஞ்சம் காதலின்ப நுகர்ச்சியை அவாவுகின்றது என்பதில் ஐயமின்று. ஆனால் அவ்அவாவினை நிரப்பித்தீர்தல் வேண்டும் என்று முடிபு கட்டுவது தவறாகும். "செய்தக்க அல்ல செய்க் கெடும் செய்தக்க செய்யாமை யானும் கெடும்'' என்பது பொய்யா மொழியாரின் வாக்கு. அவாவறுத்தலும் இன்றியமை யாது இயற்றத்தக்கது; ஆரா அவாவை நீத்துப் பேரா இயற் கையை அடைதல் நமது கடமையாம். நெஞ்சத்தில் இயல்பாக எழும் அவாக்களை உயர்நெறிக்கண் திருப்பி அவற்றைத் தூய் தாக்கலும் ஞானமயமாக்கலும் இயலும் என்பதே நமது கருத்து; அப்போதே அவை வாழ்க்கையின் வெற்றிக்குத் துணை செய் வனவாம். உடலைப்பற்றி யெழும் அவாக்கள் எவர்க்கு அடக்கு தற்கு அரியவாமோ, அன்னார் காம அனுபவவாயிலாகக் காதலை யும் இன்பத்தையும் துய்க்கும் பற்றுகளை அனுபவித்துத் தீர்த்தல் வேண்டும், அதுவே அவர்கட்குரிய நெறி என்பது பொருத்தமு மாகும். ஆனால் ஞான உணர்வு ஓரளவேனும் கிளர்ந்தெழப் பெற்றுள்ளவர்க்குக் காம உணர்ச்சிகளை ஞானநெறியிலே உய்த் தலும், அவ்வழியே ஒருமேம்பட்ட வாழ்வையும் இன்பத்தையும் அடைதலும் ஒல்லுவனவாகும் என்பது திண்ணம். ஞான நெறி யிலே போதிய பக்குவம் அடையாதார் மணம் புரிந்துகொண்டு வாழ இந்து சமயம் இடந்தருகின்றது. ஆனாலும் மணவாழ்வினால் வரும் மாதர் போகம் அறுதியான பயன் அன்று என்பது வெள்ளிடை விலங்கலேயாம். காம விழைவை அடக்கி மேற் செல்லும் ஆற்றலில்லார்க்கே மணம் புரிந்துகொண்டு சிற்றின் பம் நுகர்க என்ற விதி யெழுந்தது. "தினமும் மண் நுகர் பிள்ளை நோய்க்கு இரங்கியே தீம்பண்டம் எதிர்காட்டிக், கனமருந்துகள் ஒளித்து வைத்து அழைக்கின்ற கருணை நற்றாய் போலே, மனை யறங்கள் செய் மகங்கள் செய் நன்றென்று மலர்ந்த வாசகஞ்

சொல்லும், நினைவு வேறு காண் சுவர்க்க காமிகள் அந்த நிண்ணயம் தெரியாரே" "கள்ளும் ஊனும் நீ விரும்பினுல் மகங்கள் செய், காமத்தில் மனதானுல், கொள்ளும் பெண்டொடு கலவி செய் எனில் இவன் குறையெலாந் தொடானென்றே, தள்ளும் வேதத்தின் சம்மதம் சகலமும் தவிர்வதே கருத்தாகும்". "விடுமின் வெகுளி வேட்கை நோய்" என்ருர் மணிவாசகப் பெருமான். இல்லற வாழ்விலும், காதலும் சிற்றின்ப நுகர்ச்சியும் உயர்ந்த குறிக்கோள்களாகா; உள்ளத்தூறும் உணர்ச்சிகளேயும் அவாக்களேயும் ஞான நெறியிற் செலுத்திப் பழகுதற்கே ஒரு பயிற்சிக்களம் இல்வாழ்வு என்பதே சீரிய உண்மை. பரனே நினைந்து, அறம், பொருள், இன்பம் எனும் முன்றையும் விடுவதே பேரின்ப வீடு என்று துணிந்தார் ஔவை மூதாட்டியார்.

(தொடரும்)

# எயினனர் ஏற்றும் முருகவேள்

திரு. தமிழண்ணல் அவர்கள்,
வேங்கடாசலபுரம்.

—:※:—

முருகப் பெருமானைத் தமிழ் இலக்கியங்கள் பலவும் ஏற்றிப் போற்றுகின்றன. தொல்காப்பியத்திலிருந்து இன்றெழுந்த இலக்கியங்கள் ஈருக, முருகப்பெருமானின் பெருமைகளைப் போற்றிப் புகழ்வதில் பெருமையுற்றுள்ளன.

'சேயோன் மேய மைவரை உலகம்' என்று தொல்காப்பியம் இயம்பும். மலையும் மலைசார்ந்த நிலமுமான குறிஞ்சி நிலமே மைவரை உலகமாகும். முருகனின் புகழ் கூறும் நூல்களுள் ஒன்ருன பரிபாடலில், புலவர் கடுவனிளவெயினனர், தாம் வணங்கிய முருகனைக் குறித்து நுவல்கின்ருர். எயினனர் என்னும் பெயரே, இவர் குறிஞ்சி நிலத்தவர்தாம் என்று குறிக்கத் தூண்டும். எயினர் குலம், குறிஞ்சி நிலத்துறையும் குலமேயாகும். சங்க காலத்தை யொட்டிய பெரும்புலவரான கடுவன் இள எயினனர், முருகப்பெருமானைக் குறித்துப் பல செய்திகளைத் தருகின்ருர். அவற்றைக் காண்போம்.

குமரகுருபர அடிகளும், கச்சியப்ப முனிவரும் நுவன்ற வரலாற்றுக்கு மாறுபட, முருகவேளின் வரலாற்றை எயினனர் இயம்புகின்ருர்.

**வரலாறு :–**

சிவபெருமான், உலகமாகிய தேரில் வேதங்களாகிய குதிரைகளைப் பூட்டி, பிரம்மனைத் தேரோட்டச் செய்தார். அத் தேரில் சிவனர் அமர்ந்து கொண்டு, மேருமலையினை வில்லாக வளைத்து, வாசுகி என்னும் பாம்பினை நாணுகக் கட்டி, மூவகை உலோகங்களாலாகிய அரிய மதில்களையுடைய திரிபுரங்களும்,

எண்திசைகளும் பற்றி எரியுமாறு, சுடராலாகிய அம்பொன்றினை எய்தார். அதனால் திரிபுரங்களும், திசைகளும் பற்றி எரிந்து அழிந்தன. அழியவே, தேவர்கள் மகிழ்ந்து, பெரிய யாகம் ஒன்றைச் செய்து, தேவர் உணவை அதில் பெய்தனர். இவ்வாறு யாகத்தில் தமக்கு ஈந்த தேவருணவை உண்ட சிவபெருமான், உமை அம்மையாரோடு இன்பம் நுகர்கின்ற திருமணநாளில், தேவர்களுக்குத் தலைவனான இந்திரன் வந்து, "இறைவ! நும்மால் தோன்றிய கருவைச் சிதைத்தல் வேண்டும்" என இறைஞ்சி ஒருவரம் பெற்றான். சொன்ன சொல் தவறாத தன்மையனான இறைவன், இந்திரன் வேண்டுகோளுக்கு இணங்க, அக் கருவினைப் பல துண்டுகளாகச் சிதைத்து, அவற்றை இந்திரனிடம் கொடுத்தார். இந்திரன் அக்கருவை ஏழு முனிவர்களிடம் அளித்தான். அக்கருவைத் தம் மனைவியரால் தரிக்க முடியாது என்றெண்ணி, அந்த ஏழு முனிவர்களும் அக்கருவினை யாகத்தில் பெய்து, தமது மனைவியருள் அருந்ததி நீங்கலாகவுள்ள கார்த்திகைப் பெண்டிர் அறுவர் பாலும் ஈந்தனர். அதனால், அந்த ஆறு பெண்களும் கருவுற்றனர். கருவுற்ற அப்பெண்கள் இமய மலையிலுள்ள சரவணப் பொய்கையில் மலர்ந்த தாமரை மலர்களிலே ஆறு குழந்தைகளைப் பெற்றனர். இதனை அறிந்த இந்திரன், அந்த ஆறு குழந்தைகளையும் தாக்குவதற்காகத் தனது வச்சிரப்படையை வீசினான். உடனே, இந்திரனை எதிர்க்கும் பொருட்டு ஆறு குழந்தைகளும், ஆறுமுகங்களோடும் பன்னிரு கரங்களோடும் ஒன்றாயின. இவ்வண்ணம் முருகப் பெருமான் உலகில் தோன்றினார்.

எயினனார் இயம்பும் முருகப்பெருமானின் வரலாறு இதுவே.

### தோற்றம்

முருகப் பெருமானின் தோற்றத்தினையும், எயினனார் நமக்கு உணர்த்தியுள்ளார்.

1. நாவலந்தீவினுள், வடபாலுள்ள கிரௌஞ்சமென்னும் மால் வரையைத்துளைத்து அதனை வழிப்படுத்தின ஆறுமென்மையான தலைகளை உடையவர்.

2. முழவு போன்ற பன்னிரு தோள்களை எய்தியவர்.

3. பன்னிரு தோள்களிலும் வெள்ளாடு முதலாக மணி ஈருகப் பன்னிரு படைகளைத் தாங்கியவர்.

4. காலையில் தோன்றும் இளஞாயிற்றின் ஒளிபோன்ற செந்நிறத் தோற்றத்தினர்.

5. வட்டவடிவமான கடம்பினது பூக்களாகிய மாலையை அணிந்தவர்.

### வீரச் செயல்கள்

முருகப் பெருமான் ஆற்றிய வீரச் செயல்களையும் எயின னுர், தமது பரிபாட்டில் குறித்துள்ளார். அவை வருமாறு :—

1. முருகப்பெருமான், சரவணப்பொய்கையில் தோன்றிய போதே, தேவர்களுக்குத் தலைவனுகிய இந்திரனைப் பொருது வென்றுர்.

2. பிணிமுகம் என்னும் யானைமீது ஊர்ந்து சென்று, கடலில் மாமரமாக ஒளிந்து நின்ற சூரபதுமனைத் தமது வேலால் அடியொடு வீழ்த்தினுர்.

3. நாவலந்தீவின் வடபகுதியில், கிரௌஞ்சமலையாக நின்ற மற்ருெரு அரக்கனையும், நடுவிடம் பிளக்குமாறு வேலால் எறிந்து, அவ்விடத்தில் ஒரு வழியையும் அமைத்தார்.

### பெற்ற பரிசில்கள்

இந்திரனை இளமையிலேயே எளிதில் வென்ற திறத்தை வியந்து, முருகப் பெருமானுக்குப் பலரும் பரிசில்கள் வழங்கினர். இது குறித்து எயினனுர் குறித்தன வருமாறு :—

1. அக்கினி தேவன், தனது உடம்பினின்றும் ஒரு கூற்றினைப் பிரித்து, அதனைச் சிறந்த கோழியாக்கி, ஒப்பற்ற கொடியாக விளங்குமாறு முருகவேளுக்கு ஈந்தான்.

2. தேவேந்திரன், தனது உடலினின்றும் ஒரு கூற்றினைப் பிரித்து, அழகிய மயிலாக்கி, வாகனமாக முருகவேளுக்குத் தந்தான்.

3. எமன் தனது உடம்பினின்றும் ஒரு கூற்றை, வெள் ளாட்டுக்குட்டி யாக்கி, கையினில் விளங்க முருகவேளுக்குப் பரிசளித்தான்.

4. இவ்வண்ணம் ஏனையோரும் பலபல பரிசில்களை ஈந்தனர்.

## படைகள்

முருகப் பெருமான் தமது பன்னிரு கரங்களிலும் ஏந்திய பன்னிரு படைகளையும் எயினனூர் நமக்குச் சுட்டுகின்றார். அவை வருமாறு :—

1. வெள்ளாட்டுக் குட்டி.
2. மயில்.
3. சேவற்கோழி.
4. அழகிய வில்.
5. தோமரம்.
6. வாள்.
7. ஈட்டி.
8. கோடரி.
9. கணிச்சி.
10. மழு.
11. மாலை.
12. மணி.

## பெருமை

முருகப் பெருமானின் சிறப்புகளையும், பெருமையையும் எயினனூர் இயம்புகின்றார். அவை வருமாறு :—

1. உலகை அழித்தருளும் ஒப்பற்ற இறையனாரின் திரு மகனார்.

2. சான்றாண்மையாகிய பல்வேறு நற்குணங்களை எய்தி யவர்.

3. வெறியாட்டின் போழ்து வேலவனால் ஏற்றப்படும் சிறப்பினையுடையவர்.

4. உலகிற்கெல்லாம் எல்லையாக விளங்கும் தலைவனாவார்.

5. நல்லார் சிறப்புறுதலும், தீயோர் அழிவுறுதலும் முருக வேளினால் தாம் நிகழ்வுறுகின்றன.

## அருள் பெறத் தக்கவர்

முருகப்பெருமானது அருளைப் பெறத்தக்கவர் யார்யார் என்பதற்கான பட்டியலையும் எயினனூர் பகர்கின்றார். அது வருமாறு:-

1. முருகப்பெருமானின் அருளைப் பொருந்தியவர்கள்.
2. அறம்பல ஆற்றியோர்.
3. நிலைபெற்ற நற்குணங்களையுடையோர்.

4. மிக்க தவத்தினைச் செய்தோர்.
5. முருகவேளை வணங்கி வழிபடுவோர்.

## அருள் பெற இயலாதோர்

முருகப் பெருமானின் அருளையும், அவரது திருவடிகளையும் அடைய முடியாதவர்கள் யார் யார் என்பவற்றையும் எயினனூர் அறிவிக்கின்றூர்.

1. அழிவைத் தரும் தீய உள்ளத்தையுடையோர்.
2. சின மிக வுடையோர்.
3. அறம் பயிலாத அற்பர்கள்.
4. தீயவொழுக்கமுடைய தீயோர்.
5. முருகவேளின் அருளை மறந்தோர்.
6. மறுபிறப்பு இல்லையென்றியம்பும் மடமையர்.

## எயினனூர் இரப்பவை

செவ்வேளின் திருவருள் எய்திய பெரும்புலவர் கடுவன் இளவெயினனூர், அவர்பால் தாம் யாசிப்பவற்றையும் வரைந்துள்ளார்.

"....  ....  ....  .... யாம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமுமல்ல நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே!"

"உருண்டை வடிவமான பூக்களால் ஆகிய கடம்பமாலையை அணிந்த முருகப் பெருமானே! யான் உம்பால் வேண்டுபவை, உலகவாழ்விற்குத் தேவையான பொருளையோ, பொன்னையோ, சிற்றின்பத்தையோ அன்று. இவ்வாழ்விற்கும் மறுவாழ்விற்கும் அழியாத்துணையாக விளங்கும் உமது அருளையும், அன்பையும், அறத்தையுமே வேண்டுகின்றேன்."

இது எயினனூரின் உள்ளக்கிடக்கை. இச்சிறு வேண்டுகோளினுல், எயினனூரின் இணையிலாத்தூய உள்ளத்தையும், உயர்ந்த இறையன்பையும் நாம் அறியமுடிகிறது. சான்றூண்மை தோய்ந்த எயினனூரின் இறையன்பு, யாண்டும் எவர்பாலும் இலங்குவதாக!

---

உ

திருச்செந்திலாண்டவன் துணை.

# ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு

★

[புதிய மலிவுப் பதிப்பு — 1961]

புதிய பதிப்பு பிரதி ஒன்றின் விலை ரு. 3–50 ந. பை. ஆகக் குறைக்கப்பட்டிருக்கிறது.

(முந்தின பதிப்பு பிரதி ஒன்றின் விலை. ரு. 6/–)

(தபால் கட்டணம் வேறு)

768 பக்கங்கள் கொண்டது. (128 + 621 + 19) உயர்ந்தரக வெள்ளைத்தாளில் பெரிய எழுத்தில் தெளிவாக அச்சிடப் பெற்றது.

டாக்டர். உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் எழுதிய குறிப்புரை, ஆராய்ச்சி, முதலியவற்றுடன் கூடியது.

ஒரே சமயத்தில் 5 பிரதிகளும் அதற்குமேல் வாங்குபவர்களுக்கும் 20% கழிவு உண்டு.

இதன் விற்பனைத் தொகை ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடத்தைச் சாரும்.

கிடைக்குமிடம்:–

ஸ்ரீ T. M. குமரகுருபரன் பிள்ளை அவர்கள் B. A., B. L.,
வழக்கறிஞர்
ஸ்ரீவைகுண்டம் P. O. :: (திருநெல்வேலி மாவட்டம்)

# நாம் இனிச் செய்ய வேண்டுவது யாது?

திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள், பி. ஏ., எல். டி.

"நன்மை கடைப்பிடி" — "நாடொப்பன செய்", (ஔவையார்).

இந்தக் கேள்வியை நாம் ஒவ்வொருவரும் பொறுப் புணர்ச்சியுடன் கேட்டு, நமது மனச் சான்றுக்குப் பிடித்தமான பதிலைப்பெற்று அதன்வழி நடத்தல் நமது கடமை. "நாம்" என்பது, பல்வேறு நிலையிலுள்ள மக்களில் ஒவ்வொரு தனி மனிதனையும் குறிப்பதாகக் கொள்ளலாம். எனவே, இக்கேள்வி ஒவ்வொருவரும் தம்மையே நோக்கிக் கேட்டுக் கொள்வ தொன்றாகும். "இனி" என்பது, சென்ற காலத்தைக் கருதாது, நிகழ் காலத்தையும் எதிர்காலத்தையும் குறிக்கும். "செய்ய வேண்டியது" என்பது வறிதே எண்ணிக் கொண்டிருப்பதும், வாய்ப் பேச்சாய் அளக்குமளவில் நின்று விடுவது மல்ல. நடை முறையில் செயலில்-கொண்டுவர வேண்டிய கடமை நமது கடமை என்பதை உணர்த்தும். கடமைகள் மிகப்பல. அவற்றுள் முதன்மையான ஒரு சில பற்றி இங்கு கவனிக்கலாம்.

நாம் சடப்பொருளாகிய மனித உடம்பில் தங்கி, பொறி புலன்கள் அந்தக்கரணங்கள் என்னும் கருவிகள் துணை கொண்டு வாழ்க்கையை நடத்தி வரும் அறிவுப் பொருளாகிய ஆன்மாக்கள் - மக்கள், "மக்கள் தாமே ஆறறிவுயிரே." "மாவும் மாக்களும் ஐயறிவினவே" [மா = விலங்கு, மாக்கள் = பகுத்தறிவில்லாதவர்கள், விலங்கு நிலையிலுள்ளவர்கள்]. ஆறறிவுடன் கூடிய அங்கவீனமில்லா உடம்பினைப் பெறுதல் பெரும் புண்ணியத்தின் பயன். "வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்" என்றார் வாகீசர். இப்பெருமை படைத்த மக்கள் தம் வாழ்க்கையை நடத்துதற்கு ஓர் உயர்ந்த குறிக்கோளை வைத்துக் கொள்ள வேண்டும். "குறிக்கோளிலாது கெட்டேன்" என்று பின்பு அலறுதலில் சிறப்பில்லை.

மக்கள் பல நாடுகளில் வாழ்கின்றனர். நாம் பாரத நாட்டின் ஒரு சிறந்த பகுதியாகிய தமிழ் நாட்டில் வாழ்கின்றோம். பாரத மக்களும் தமிழ் மக்களுமாகிய நமது வாழ்க்கைக்கு உரிய குறிக்கோள் யாது? அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப்பொருள்கள் நான்கினையும் முறையாக அடைவதேயாகும். முதலன மூன்றும் நான்காவதற்குச் சாதனங்களாகும். "வீடு" என்னும் பேராஇயற்கை - பேரின்ப நிலை-இம்மையிலேயே எய்தக் கூடியதுதான். இறைவனது மங்கல குணங்கள் நம்மிற் பதியப் பெற்று அவனோடு இரண்டறக் கலந்து, பேரின்பநிலையில் நிற்பதே வீட்டு நிலை என்ப. இது நமக்கு முடிந்த முடிபாகிய குறிக்கோள். இதனைத் திட்டமாக உளத்துட் கொண்டு, வையத்து வாழ்வாங்கு வாழவேண்டும். நம் நாட்டுக் கல்வியின் நோக்கமும் இதுதான் என்று கொண்டனர் நம் ஆன்றோர். 'அறம், பொருள், இன்பம், வீடு அடைதல் நூற் பயனே' என்பது ஒரு சூத்திரம்.

'தனி மனிதன்' என்னும் முறையில், உடல் தூய்மை, உடைத்தூய்மை, உணவுத்தூய்மை, உரைத்தூய்மை, உள்ளத் தூய்மை என்னும் தூய்மைகளை நாடோறும் பேணி வருதல் வேண்டும். தனக்குப் பிடித்தமான முறையில் இறைவனை நாடோறும் உளமார வழிபட்டு வருதல் வேண்டும். இயம நியமப்பழக்கங்களை வளர்த்து வருதல் வேண்டும். நல்லாரிணக்கம் இதற்கு அவசியம்.

இப்படி ஒருவன் தனது ஆன்மத் தூய்மையை வளர்த்து வரும்போதே, தன் குடும்பத்தினரும் அந்நெறியில் முன்னேறுதற்குத் தன்னாலான பணிகள் யாவற்றையும் செய்யும் கடமையும் அவனுக்குள்ளது.

இதனோடு, தன் சமுதாயம், தனது நாடு, உலகம் இவையும் உண்மையான முன்னேற்றம் அடையவேண்டும் என்று விரும்பிப் பல துறைகளிலும் தன்னாலியன்ற பணிபுரிதலும் அவனது கடமையாகும். நம் நாட்டில் ஜனநாயக ஆட்சி நிலவுகிறது. ஒழுக்கமும் கடமையுணர்ச்சியும் சமுதாயத்தில் வேரூன்றி வளர்ச்சி பெற்றாலல்லது, நாட்டில் செங்கோல் நிலைபெறாது. மக்களிடையே ஒழுக்கம் பெரிதும் குன்றிவிட்டால் ஜனநாயக

ஆட்சிவீழ்ச்சியடையும். 'A democracy can recover quickly from physical or economic disaster, but when its moral convictions weaken, it becomes easy prey for the demagogue and the charlatan. Tyrrany and oppression then become the order of the day' என்று ஓர் அமெரிக்கப் பேரறிஞர் எச்சரித்துள்ளார். ஒழுக்கமும் கடமையுணர்ச்சியுந்தான் தனி மனிதனுக்கும் நாட்டிற்கும் விழுப்பந்தரும். "அருள் நயந்த சன்மார்க்கர் ஆள்க" என்றார் அருட்பிரகாச வள்ளலார். மக்கள் தமது வாக்குரிமையைத் தகுதிவாய்ந்த அத்தகைய சன்மார்க்கர்க்கே தரல் வேண்டுமென்றும், தகுதியற்றோர்க்குத் தருதல் பாவம் என்றும் நம் நாட்டவர் உணரச் செய்தல் வேண்டும்.

இவ்வொழுக்கம் தெய்வ நம்பிக்கை என்னும் அடிப்படையில் நிற்பது. "The moral virtues without religion are cold, lifeless and insipid; it is only religion which opens the mind to great conceptions, fills it with the most sublime ideas and warms the soul with more than sensual pleasures' என்றார் அடிஸன். 'Religion is the only real motive force in the world....you must get a man through his own religion and not through yours' என்றார் மூதறிஞர் பெர்னார்டுஷா.

எனவே, தனி மனிதனும், சமுதாயமும், நாடும் உண்மையான முன்னேற்றமடைதற்குப் புனிதமான சமய வாழ்க்கை-ஒரு தனிப்பரம்பொருளின் இருப்பிலும் தெய்வநீதியாட்சியிலும் அழுத்தமான நம்பிக்கை-அவசியம். 'என்றும் இன்பம் பெருகும் இயல்பினால் ஒன்று காதலித்து உள்ளமும் ஓங்கிட' என்னும் சேக்கிழார் திருவாக்கும், 'ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு' என்ற பட்டினத்தார் ஆணையும், "அறம், பொருள், இன்பம், வீடு அடைதல் நூற்பயனே" என்ற பவணந்தி முனிவர் சூத்திரமும் இங்கு நினைவு கூரத்தக்கன.

இக்காலக் கல்வி முறையிலும், தேச நலத் திட்டங்களிலும் எதற்கும் உயிர் போன்றுள்ள இவ்வுண்மைக்குப் போதிய முக்கியத்துவம் அளிக்கப்படாதிருப்பது ஒரு பெருங்குறையாகும்.

பல சமயங்கள் நிலவும் இந்நாட்டில், அரசாங்கம் சமயச்சார்பு கொள்ளக்கூடாது என்று ஒதுங்கி நிற்கின்றது; ஆனுல், சமயம் வேண்டாம் என்று சொல்லவில்லே. எல்லாச் சமயங்களேயும் அன்போடும் மரியாதையோடும் நடத்தும் சமரசப்பண்பாடு அவசியம். "வேறுபடும் சமயமெலாம் புகுந்து பார்க்கில், விளங்கு பரம்பொருளே! நின்விளேயாட்டல்லால், மாறுபடுங் கருத்தில்லே" என்ற அநுபவஞானி தாயுமானுர் திருவாக்கின் உண்மையை எல்லா மதத்தினரும் உணர்ந்து நடத்தல் உலக ஒற்றுமைக்கு மிக அவசியம். பாரத மக்களாகிய நாம் இச் சமரச நன்னிலேயில் நின்று, பிறநாட்டிலிருந்து வந்த மதங்களிடத்தும் மரியாதை காட்டக் கடவோம்.

ஆனுல், இச்சமரச நோக்கத்தை இயல்பாகக் கொண்டுள்ள நம் பாரத நாட்டுத் திருநெறியைப் பிறர் மதவெறிகொண்டு பழித்தும் இழித்தும் அழிக்கத் தலேப்பட்டால், அத்தீய முயற்சியைத் தடுப்பதும், நம் சமயத்தின் உண்மை நிலேயைப் பாதுகாத்தற்கு ஆன ஆக்கத் தொண்டுகளேச் செய்வதும் நமது தலேயாய கடமைகளுள் ஒன்ருகும்.

நம் சமய நூல்கள் கடல்போற் பரந்துள்ளன. ஆன்ருேர்கள் அவ்வக் காலத்தின் தேவைக்கேற்ப, சமய உண்மைகளேயும் வாழ்க்கை முறைகளேயும் விளக்கிப் பல நூல்கள் அருளியுள்ளார்கள். இவைகளுட்சில காலக்கிரமத்தில் கூட்டப்பட்டும், மாற்றப்பட்டும் நலிவுற்றன. புராண இதிகாஸங்களேக் கரும்பு போலவும் பலாப்பழம் போலவும் ஆரஞ்சுப்பழம் போலவும் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். அநுபூதிமான்களின் அருள் வாக்குக்களாகிய ஞானநூல்களென்னும் உரைகல்லில் மாற்றிட்டுப் பார்த்துப் பிறநூல்களே மதிப்பிடுவது முறை. பல நூல்களேப் படிக்க வாய்ப்பில்லாத இக்காலத்தில் இந்துக்கள் பகவத்கீதை, திருக்குறள், திருவாசகம், திருவாய்மொழிபோன்ற உயரிய ஒருசில நூல்களேயேனும் கசடறக் கற்றல் அவசியம். ஞான வளர்ச்சிக்காக அவரவர்கள் விரும்பும் மற்றும் சில ஆன்ருேர் நூல்களேயும் கருத்தூன்றிப் பொருளுணர்ந்து படிக்கவேண்டும்.

இதற்கெல்லாம் வசதி செய்தல் நம் கடமையாகும். நம் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் பாரதமக்கட்கு, எல்லா மதப்

பெரியோர்களின் சரிதங்களையும் அவர்கள் வற்புறுத்திய நல்லொழுக்க போதனைகளையும் சமரச நோக்குடன் கற்பிக்க வழிசெய்ய வேண்டும். இச்சமரச நோக்கமின்றி, ஒரு மதத்தினர் தம் மதக்கொள்கைகளைப் பிற மதத்தைச் சார்ந்த பிள்ளைகட்குப் போதிப்பதும், அப்பிள்ளைகளின் சமய முறைகளை நேர்முகமாகவோ மறை முகமாகவோ பழிப்பதும், இனியும் நடக்கவொட்டாது கண்டிப்பாகத் தடுக்கச் சட்டம் செய்ய வேண்டும்.

இந்துக்கள் தமது கோயில்கள் மடங்கள் என்னும் சமயத் தாபனங்கள் முன்னுளிற் போலவே இன்றும் புனிதநிலையிலிருந்து கொண்டு, மக்களிடையே பக்தியையும் ஞானத்தையும் ஒழுக்கத்தையும், தொண்டில் ஆர்வத்தையும் தக்க சாதனம் கொண்டு வளர்க்கும்படி அவைகளைப் பொதுஜனங்களும் அறநிலையப் பாதுகாப்பாளர்களும் தூண்டி உதவ வேண்டும்.

ஏழைமக்கள் வாழுமிடங்கட்கு, கல்வியிலும் சீலத்திலும் சிறந்தவர்கள் அன்புடன் சென்று, சமய உண்மைகளை அவர்கள் உளங்கொளப் போதித்து, செய்கையில் சீவகாருணியத்தை, "தரித்திர நாராயண சேவை" முறையில் காட்டிவர வேண்டும். இந்துக்கள் தம் பிரிவுகளை ஒரளவுக்குள் வைத்துக் கொண்டு, எல்லோரும் ஒன்றுபட்டு, பாரதத் திருநெறியையும் பண்பாட்டையும் பாதுகாக்க வேண்டும். தீண்டாமையும் சட்ட பூர்வமாக ஒழிக்கப்பட்டு விட்டது. ஒழுக்கத்தால் யாவரும் உயர் நிலை எய்த ஆர்வத்துடன் அனைவரும் பணி புரிய வேண்டும். இந்துக்கள் தொடக்கப் பள்ளிகள், அனாதை இல்லங்கள், திக்கற்ற மாதர்க்கு ஆச்சிரமங்கள், முதலிய தாபனங்களை நிறுவி நல்ல முறையில் நடத்திவர முந்த வேண்டும். இது நமக்குப் புதிதல்ல. உலகீன்ற அன்னை காமாட்சியம்மையார் காஞ்சியில் முப்பத்திரண்டு அறங்களைத் தாம் செய்து வழிகாட்டியுள்ளார் என்பது இங்கு நினைவு கூறத்தக்கது.

இதற்கெல்லாம் வேண்டிய பொருளைக் கோயில்கள் மடங்கள் முதலிய அற நிலையங்களிலிருந்து, நியாயமான அளவு பெறுவதோடு, பொதுமக்களும் மனமுவந்து தம்மாலியன்ற உதவி செய்ய வேண்டும். "வையிற் கதிர்வடிவேலோனை வாழ்த்தி வறிஞர்க் கென்றும் நொய்யிற் பிளவளவேனும் பகிர்

மின்கள்!" என்றதை அநுசரித்து மிக எளியோரும் செயற்பால தொன்றை இவண் கருதலாம். (1) நாள்தோறும் ஒரு முறை ஒவ்வொரு குடும்பத்திலும் பிடியரிசி போடுதல், (2) வாரத்திற்கு ஒரு நாள், ஒவ்வொரு குடும்பமும், தான் மிக எளிதாய்ச் செலுத்தக் கூடிய சிறு தொகையைச் சமயக்காணிக்கை என்னும் உணர்வுடன் சேமித்து வைத்தல். (3) இவற்றை யெல்லாம் சமிபத்திலுள்ள நல்ல சமய சங்கம் ஒன்றினிடம் ஒப்படைத்து சமய ஞான வளர்ச்சிக்காகவும், சிவகாருண்ய சேவைக்காகவும் பயன்படுத்தல் என்னும் இவ்வழக்கங்களை உடனே எற்படுத்திக் கொள்ள வேண்டும். இச் சங்கங்கள் ஒன்று சேர்ந்து ஆலோசித்து சமய வளர்ச்சிக்கான திட்டங்களை வகுத்துத் திறம்பட அறம்பல நடத்திவர வேண்டும். செல்வாக்குள்ள பிற சிலசமயங்களைச் சார்ந்தவர்கள் தம் வருவாயில், குறிப்பிட்டஓர் பங்கைச் சமய காணிக்கையாகத் தரும் பழக்கமுடையவர்களாய் விளங்குவதையும் கருத வேண்டும்.

உயரிய லட்சியமும் தியாகமும் இன்றி எப்பெருங் காரியமும் நிறைவேருது என்பது உலகில் என்றும் விளங்கும் உண்மை. 'வாழ்வாவது மாயம். இது மண்ணாவது திண்ணம்.' 'பற்றித்தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே.' 'செல்லும் தேயத்திற்கு உறுதுணை தேடுமின் மல்லன்மா ஞாலத்து வாழ்விர் ஈங்கு' என்னும் நம் ஆன்றோர் அறவுரைகளை இத்தலைமுறை இந்துக்களும் மறவாதிருத்தல் கடன்.

போகநாட்டம் ஆன்ம பரிபாகம் முதிராத பருவத்தில் தோன்றுவது. தியாக வாழ்க்கை அப்பரிபாக முதிர்ச்சியில் விளங்குவது. ஆண்டவனுக்குத் தியாகராஜன் என்னும் திருநாமம் ஒன்றிருப்பதும், 'அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு' என்ற திருவாக்கின் உண்மையும் ஊன்றி உன்னத்தக்கன். சமுதாய நலத்தை 'சோஷலிச பாணி'யில் வளர்க்க நம் அரசாங்கம் திட்டமிட்டுச் செயலாற்றி வருவது கண்கூடு. இதில் ஒத்துழைத்தல் நம் கடமை. ஊருணிநீர் போலும் – உள்ளூரிற் பழுத்த பயன் மரம் போலும்–நம் முன்னோர்கள் அருள் நிறைந்த அழகிய தெய்விக வாழ்க்கை நடத்தி வந்தனர். இத்தலைமுறையிலுள்ள செல்வர்களும் இம்முறையில் பகுத்துண்டு வாழும்

பண்பினை மேற்கொள்வர் என்று எதிர்பார்க்கலாம். 'நீ எவ்வளவு எடுத்தாய்? எவ்வளவு கொடுத்தாய்?' என்ற வினுவிற்கு நல்ல விடை தந்து, நாமும் பெரியோராக வேண்டும். 'எடுத்தது கைப்பிடியளவு; கொடுத்தது குன்றளவு' என்ற உண்மையாய்ச் சொல்லக்கூடியவளவில் பல பெரியோர்கள் இந்த நூற்ருண்டிலும் நம் நாட்டில் வாழ்ந்துள்ளனரன்ரே!

"ஆவுக்காயினும் அந்தணர்க்காயினும்
யாவர்க்காயினும் எளியவர்க்காயினும்
சாவப் பெற்றவரே தகைவானுறை
தேவர்க்கும்தொழு தேவர்களாகுவார்."

என்கிருர் ஸ்ரீ ராமபிரான். அவர்களை நாம் யாவரும் பின் பற்றக் கடவோம்.

இவ்வாறெல்லாம் நன்முறையில் நம் உள்ளங்களைப் பண்படுத்திக்கொண்டு, உலக சகோதர உணர்ச்சி மிக்க அன்பர்களாய் ஒன்று சேர்ந்து தொண்டாற்றக் கடவோம். 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'. எங்கும் அன்பும், சமாதானமும், இன்பும் ஓங்கவேண்டும். பல நாடுகளில் உலக சமாதானம் வேண்டும் என்னும் உணர்ச்சி மக்களிடையே வளர்ந்து வருகிறது. இது எப்போது கைகூடும்? Human Destiny என்னும் ஓர் அரிய நூலின் ஆசிரியர் கூறுவதைக் கேட்போம்: 'Peace must be established by transforming man from the interior and not by creating external structures...The source of all wars, the source of all evil lies in us.' Can we not find leaders of sufficient vision to conceive an international plan of moral development spreading over several generations instead of economic plans of five years?....Humanity....(is) still on the scale of the tribe., (pp. 185-9) இத்தீமை, அஞ்ஞானத்தின் விளைவு. நல்லார் இணக்கமும், தெய்வ பக்தியும், ஞானமும் இதை அகற்றும் மருந்து.

இப்பேருண்மையை உணர்ந்து, நாம் திருவருளை முன்னிட்டு, தமக்கெனவாழாப் பிறர்க்குரியாளராய், எல்லா நல்ல துறைகளிலும் சத்தியமும், அன்பும், அருளும் கலந்த புனித வாழ்க்கை நடத்த நாளும் முயலுவோமாக.

'என்கடன் பணிசெய்து கிடப்பதே'. (அப்பர்).

# அபிராமி அந்தாதி

திருமுறைச் செம்மல், மதுரகவி,
வித்துவான், திரு. தா. ம. வெள்ளைவாரணம் அவர்கள்,
தமிழ்ப் பேராசிரியர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.

### சரபோஜி வருகை:

இன்று தை பிறந்து விட்டது. தைமாதம் என்றவுடன் ஒரு நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது. இற்றைக்கு 200 ஆண்டுகளுக்குமுன் தஞ்சையை ஆண்ட மகாராட்டிர மன்னன் சரபோஜி தை அமாவாசையை முன்னிட்டுக் காவிரிப்பூம்பட்டினம் போயிருந்தான். பொழுது விடிந்தது. மக்களின் ஆரவாரத்துடன் கடலின் ஆரவாரமும் கலந்து முழங்கியது. சரபோஜி மன்னன் கடல்நீராடினன்; நீராட்டு முடிந்த பிறகு பல்லவனீச்சரத்து அரசு பேணி நின்றுரையும், சாய்க்காட்டெம் பெருமானையும் வழிபட்டு, உச்சியம் போதில் திருக்கடவூர் வந்து சேர்ந்தான்.

கடவூரில் அமிர்த கடேசரை வழிபட்டு அபிராமியின் சன்னிதிக்கு வந்தான். அரசன் வருகையைக் கண்டு மக்கள் ஒதுங்கி நின்று வழி விட்டார்கள். ஆனல் அபிராமியின் திருமுன்னர் சுப்பிரமணிய ஐயர் யோகத்தில் அமர்ந்திருந்தார்; அவருக்கு அரசனின் வருகை தெரியாது; அதனல் எழுந்திருக்கவில்லை. அரசனுடன் வந்தவர்கள் அவரை எழுந்திருக்கச் சொன்னர்கள். அரசன் என்ன நினைத்தானே தெரியவில்லை; "ஒன்றும் சொல்லாதீர்கள்; பேசாமலிருங்கள்" என்று சொன்னன். பிறகு கோயில் அருச்சகர்களை நோக்கி, இவர் யார் என்றுன்.

### அமாவாசையா? பௌர்ணமியா?

சுப்பிரமணிய ஐயரிடம் அழுக்காறு கொண்ட அருச்சகர்கள், சமயத்தைப் பயன்படுத்திக் கொண்டார்கள். "அரசரே!

இவன் எங்கள் மரபினன்தான்; கௌசிக கோத்திரத்தான்; அமிர்தலிங்க ஐயரின் மகன்; சுப்பிரமணியன் என்பது இவனுக்குப் பெயர். இவன் குலத்தைக் கெடுக்க வந்த கோடாலிக் காம்பாக இருக்கிறுன்; தன்னைத் தேவி உபாசகன் என்று கூறிக் கொள்கிறுன்; வைதீக நெறிப்படி நடப்பதில்லை; மது, மாமிசங்களைப் புசிக்கிறுன்; தகாத ஒழுக்கத்தவன்'' என்று இல்லாதவற்றை எல்லாம் சொல்லி வைத்தார்கள்.

சரபோஜிக்கு நம்பிக்கை பிறக்கவில்லை; உண்மையை அறிய நினைத்துச் சுப்பிரமணிய ஐயரின் பக்கத்தில் நின்று கை தட்டிக் கூப்பிட்டான். சுப்பிரமணிய ஐயர் நிட்டை தெளிந்தார். "அமாவாசை இன்று எத்தனை நாழிகை வரை இருக்கிறது?'' என்று சரபோஜி கேட்டான். "அமாவாசையா? இன்று பௌர்ணமி அல்லவா?'' என்றுர் சுப்பிரமணிய ஐயர். பக்கத்தில் இருந்தவர்கள் கொல்லென்று சிரித்து விட்டார்கள். மன்னனுக்குக் கோபம் வந்தது. "இன்று பௌர்ணமி என்பதை நிருபிக்க வேண்டும்; இல்லாவிட்டால் நாளைக்கு உமது தலை போய்விடும்'' என்று கூறிவிட்டுச் சரபோஜி போய்விட்டான்.

அபிராமியின் அருள் :

சுப்பிரமணியனின் தந்தை ஓடிவந்தார். மகனை அணைத்துக்கொண்டு கண்ணீர்விட்டார். "மகனே! என்ன காரியம் செய்து விட்டாய்; இன்று அமாவாசையடா; பௌர்ணமி என்று சொல்லிவிட்டாயே! நீ பித்தன் ஆனுலும் பிள்ளை என இருந்தால் போதுமென்று இருந்தேனே! நாளைக்கு உன் தலை போய்விடுமே! என்ன செய்வேன்?'' என்று கதறினுர்.

சுப்பிரமணிய ஐயர் சுயநினைவுக்கு வந்தார். "தந்தையே! அபிராமியின் சோதிவடிவில் திளைத்திருந்த எனக்கு இருட்டு விளங்கவில்லை; அமாவாசை என்று கேட்டதற்குப் பௌர்ணமி என்று கூறிவிட்டேன்; தவறு என்னுடைய தன்று; அபிராமி தான் எல்லாவற்றுக்கும் காரணம்; நன்றே வரினும், தீதே விளைகினும் நான் அறிவது ஒன்றேயும் இல்லை; அபிராமியின் பேரில்தான் பாரம்'' என்று தேறுதல் கூறினுர்.

சிறிது சிறிதாகப் பொழுது கடந்து கொண்டிருந்தது. ஞாயிறு குடகடலில் குளித்தான். மெல்ல இருள் சூழ்ந்தது. அமிர்தலிங்க ஐயருக்கு நெஞ்சு படபடத்தது. சுப்பிரமணிய ஐயருக்குச் சிறிதும் அச்சமில்லை. அபிராமியின் சன்னிதி முன்னர் அக்கினி குண்டம் அமைக்கப்பட்டது. அதன் இரு பக்கமும் இரண்டுகால் நாட்டி, நடுவில் ஓர் விட்டம் போட்டு, விட்டத்திலிருந்து 100 கயிறுகள் கொண்ட உறி ஒன்று தொங்கவிடப்பட்டது. உறியில் சுப்பிரமணிய ஐயர் எறினர்; அபிராமியை மனத்தில் எண்ணினர். "உதிக்கின்ற செங்கதிர்" என்று பாடத் தொடங்கினர். ஒவ்வொரு பாடல் பாடிமுடிந்ததும் ஒவ்வொரு கயிருக நறுக்கி விடப்பட்டது. கீழே நெருப்பு முண்டெரியத் தொடங்கி விட்டது. சுப்பிரமணிய ஐயர் மெய்ம்மறந்து பாடிக்கொண்டிருந்தார். 78 பாடல் முடிந்து 78 கயிறுகள் அறுக்கப்பட்டு விட்டன. இன்னும் 22 கயிறுகள் எஞ்சி இருந்தன. அடுத்த பாடலை ஐயர் தொடங்கினர். "விழிக்கே அருளுண்டு" என்ற அளவில் அபிராமி வெளிவந்து நின்ருள். அக்கினி குண்டம் குளிர்ந்து விட்டது. சுப்பிரமணிய ஐயர் உறியிலிருந்து இறங்கினர். அபிராமி தனது தோடுகளில் ஒன்றைக் கழற்றி ஆகாயத்தில் வீசினள். அது முழு நிலாவினும் பன்மடங்காய்ப் பாலொளி பரப்பியது. அபிராமி மறைந்தாள். ஐயர் எஞ்சிய 22 பாடல்களையும் பாடி முடித்தார்.

**எண்ணுழி நெல் :**

அமாவாசையன்று பாலொளி வீசும் நிலாவைக் கண்டால் யார்தான் வியக்கமாட்டார்கள்? சரபோஜி தன்னிருகண்களால் ஆகாயத்தில் மதிஒளி வீசுவது கண்டு வியந்தான்; அது மட்டுமோ! அஞ்சினன்; நடந்த விபரம் அறிந்து கோவிலுக்குச் சென்ருன்; சுப்பிரமணிய ஐயரிடம் மன்னிப்புக் கோரினன்; "பெரியவரே! தங்களின் பெருமை அறியாமல் கெட்டேன். என்னை மன்னிக்க வேண்டும்; தாங்கள் அபிராமியின் முழு அருளையும் பெற்றவர்கள்; இன்று முதல் தங்களுக்கு அபிராமி பட்டர் என்று பெயர் வழங்குவதாக; அடியேனது காணிக்கையாக விளைநிலம் அளிக்கின்றேன்; பெற்றுக்கொள்ள வேண்டும்" என்ருன்.

ஆனால், அபிராமி பட்டர் ஏற்க மறுத்து விட்டார்; திருக் கடவூர்ப் பக்கங்களில் வேலிக்கு எண்ணாழி நெல் உரிமை பெற மட்டும் இசைந்தார். அதன்படி அபிராமி பட்டரின் பரம்பரை யினர் இன்றும் அவ்வுரிமையைப் பெற்று வருகின்றனர்.

## நூலமைப்பு :

அபிராமி பட்டர் பாடிய பாடல்கள் நூறும் அபிராமி அந்தாதி எனப்பெயர் பெற்றன. இது அந்தாதியாக அமைந் திருக்கிறது. காப்புச் செய்யுள் என நூலுக்கு முன்னே ஒரு செய்யுளும், நூற்பயன் என நூலுக்குப் பின்னே ஒரு செய்யு ளுமாக 102 பாடல்கள் உள்ளன. இவை கட்டளைக் கலித்துறை என்னும் செய்யுள் வகையில் அமைந்திருக்கின்றன. (நேரசை யால் தொடங்கியவை 56-ம் நிரையசையால் தொடங்கியவை 46-ம் என ஆக 102 உள்ளன.)

## அம்மையின் பெயர்

“நாயகி நான்முகி நாரா யணிகை நளினபஞ்ச
சாயகி சாம்பவி சங்கரி சாமளை சாதிநச்சு
வாயகி மாலினி வாராகி சூலினி மாதங்கிஎன்று
ஆய கியாதி உடையாள் சரணம் அரண்நமக்கே.”

“பயிரவி பஞ்சமி பாசாங் குசைபஞ்ச பாணிவஞ்சர்
உயிரவி உண்ணும் உயர்சண்டி காளி ஒளிருங்கலா
வயிரவி மண்டலி மாலினி சூலி வராகிஎன்றே
செயிரவி நான்மறை சேர்திரு நாமங்கள் செப்புவரே.”

என்ற 50-வது, 77-வது பாடல்களில் அபிராமியின் பல்வேறு பெயர்கள் வந்துள்ளன. இவைகளே அன்றித் திரிபுரசுந்தரி, முப்புரை, மனோன்மணி, நீலி, யாமளை, பூரணாசலமங்கை, சகல கலாமயில், பிங்கலை, சிவகாமசுந்தரி, பராபரை என்னும் வேறு பெயர்களும் மற்றப் பாடல்களில் வருகின்றன.

## சிலசொற்றொடர்கள்

அபிராமி அந்தாதியில் சில அரிய சொற்றொடர்கள் காணப்படுகின்றன. சின்னஞ் சிறிய, பென்னம் பெரிய, கன்னங்

கரிய, தன்னந்தனி, தங்கைச்சி, அபிராமிசமயம் என்பன சில எடுத்துக் காட்டுக்கள்.

அபிராமியின் கடைக்கண்

"தனம்தரும் கல்விதரும் ஒருநாளும் தளர்வறியா
மனம்தரும் தெய்வ வடிவும் தரும்நெஞ்சில் வஞ்சமில்லா
இனம்தரும் நல்லன எல்லாம் தரும்அன்பர் என்பவர்க்கே
கனம்தரும் பூங்குழ லாள்அபி ராமி கடைக்கண்களே."

அபிராமியின் நிறம்

உமாதேவியைக் கரிய நிறம் உடையவள் என்பது பெரு வழக்கு. ஆனாலும் அபிராமிபட்டர், 'அபிராமியின் நிறம் சிவப்பு' என்கின்றார். முதல்பாடலிலேயே உதிக்கின்ற செங் கதிர், திலகம் (மஞ்சாடிப்பூ), மாணிக்கம், மாதுளம்போது, இலக்குமி, குங்கும தோயம் போன்ற செம்மேனி உடையவள் அபிராமி என்று கூறப்படுகிறது. நூற்பயன் கூறும்பாட்டிலும் "மாதுளம் பூ நிறத்தாளை" என்று கூறப்பட்டிருக்கிறது.

21-ம் பாடலில், "பிங்கலை, நீலி, செய்யாள், வெளியாள், பசும்பொற் கொடியே" என்று ஐந்து நிறங்கள் பேசப்படு கின்றன. 70-ம் பாடலில் "பச்சை வண்ணமும் ஆகி" எனக் கருநிறமும் சொல்லப்பட்டிருக்கிறது.

விநாயகர் அகவலில், "நெஞ்சிற் குடி கொண்ட நீலமேனி யும்" என்று விநாயகர்க்கு (நில) கருமை நிறம் கூறிய ஔவை யார், முதுரையில், "துப்பார் திருமேனி" எனச் செம்மை நிறமும் கூறி இருக்கிறார். அதுபோல அபிராமி பட்டரும் அம்மைக்கு எல்லாவகை நிறமும் கூறுகின்றார்.

ஸ்ரீ காசிமடத்து அறக்கட்டளைகள் :

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் ரு. 3,500 முலதனம் நிறுவிக் குடந்தையில் ராஜாஜி அபிராமி அந்தாதிப் பரிசு என ஒரு அறக்கட்டளையும், மற்றும் ரு 3,500 முலதனம் நிறுவித்

திருநெல்வேலி ஸ்ரீ அரிய நாயக முதலியார் நினைவு அபிராமி அந்தாதிப் பரிசுஎன ஒரு அறக்கட்டளையும், நிறுவி உள்ளார்கள். அப்பரிசுகள் செவ்வனே நடைபெற்று வருகின்றன.

மேலும், ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் அபிராமி அந்தாதி என்னும் நூலைச் சார்வரி ஆண்டு விஜய தசமி வெளியீடாக (30–9–1960-ல்) வெளியிட்டருளி இருக்கின்றார்கள். மற்றும், 1948-ம் ஆண்டில் திரு. கி. வா. ஜ. உரையுடன் அபிராமி அந்தாதி ஸ்ரீ காசிமடத்து வெளியீடாக வந்துள்ளது. இன்னும், அபிராமி பட்டர் பிரபந்தங்கள் என்ற பெயரிலும், திருக்கடவூர் திருமுறையும் பிரபந்தங்களும் என்ற பெயரிலும் ஸ்ரீ காசிமடத்து வெளியீடாக அபிராமி அந்தாதி வெளிவந்துள்ளது.

**உரைநூல் :**

அபிராமி அந்தாதி பாராயணம் செய்தற்கு உரியது. அங்ஙனம் பாராயணம் செய்வோர், சொல்லியபாட்டின் பொருள் உணர்ந்து சொல்வோராதல் வேண்டும் என்பதற்காகப் பல பெரியோர்கள் உரை எழுதி உள்ளனர். அவ்வுரைகளை விளங்கிக் கொள்ள மற்றுமோர் உரை வேண்டி உள்ளது. அக்குறையை நீக்கிப் பள்ளி மாணவரும் தெள்ளிதின் உணருமாறு திருச்சிராப் பள்ளி, திருமுறைக்கலைஞர், வித்துவான். தி. பட்டுச்சாமி ஓதுவார் அவர்கள் உரை எழுதி உள்ளார்கள். அது காசிமடத்து வெளியீடாக வந்துள்ளது. அது ஸ்ரீவைகுண்டம் கலைக்கோயிலில் விலை 0–50-க்கு கிடைக்கும்; விற்பனைத்தொகை ஸ்ரீவைகுண்டம் குமரகுருபரன் பத்திரிகையைச்சாரும்.

**நூற்பயன் :**

"ஆத்தாளை எங்கள் அபிராம வல்லியை அண்டமெல்லாம்
பூத்தாளை மாதுளம் பூநிறத் தாளைப் புவியடங்கக்
காத்தாளை ஐங்கணை பாசாங் குசமும் கரும்புமங்கை
சேர்த்தாளை முக்கண்ணி யைத்தொழு வார்க்கொரு தீங்கில்லையே."

# மதுரைக் கலம்பகம் உரைநடை

தருமபுர ஆதீன வித்துவான்,
"திருவண்ணாமலை ஆதீனவிரிவுரையரசு, மதுரை ஆதீனச் சித்தாந்த
சைவ வித்தகர், சித்தாந்தப் புலவர்மாமணி, பாலகவி"
**வயிநாகரம், திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,**
தேவகோட்டை.

[மலர் 12. இதழ் 12-ன் தொடர்ச்சி]

கரைபொரு திரங்கு கழிதொறு மிருந்து
கயல்வர வுறங்கு புள்ளீரே
பருவமு மிழந்தென் மகடுய ருழந்து
படுவிர கமொன்று முள்ளீரே
அருமையொ டுமெங்கள் பெருமையை யறிந்தே
யருள்புரி யவிங்கு வல்லீரே
மருவிய கடம்ப வனமது புகுந்தெ
மதுரைய ரன்முன்பு சொல்லீரே. 31

கரைகளை மோதி ஒலிக்கின்ற உப்பங்கழிகள் தோறும் இருந்து மீன்வருமளவும் தூங்குவது போல நடிக்கின்ற பறவைகளே! எனது புதல்வி இளம் பருவத்தையும் இழந்து துன்பத்தை அடைந்து படுகின்ற காமநோயைச் சிறிதும் நினைக்கின்றிரில்லை. அருமையோடு எங்கள் பெருமையை அறிந்து இங்கே அருள் செய்ய நீங்கள் வல்லவர்களா? பொருந்திய கடம்பவனத்தை அடைந்து எமது மதுரை அரனிடம் சொல்லுவீர்களாக.

ஈரித்த தென்ற லிளவாடை திங்களென்றோர்
பேரிட்ட மும்மைப் பிணியோ தணியாவாற்
பாருக்கு ணீரே பழியஞ்சி யாரெனின்மற்
றுருக் குரைக்கே மடிகே ளடிகேளோ. 32

குளிர்ச்சியையுடைய தென்றற் காற்றும் இளமையான வாடைக் காற்றும் சந்திரனும் என்று இப்படி ஒவ்வொரு பெயரை இட்டு வழங்கப் பெறுகின்ற மூன்று நோய்களோ குறையாதனவாயிருக்கின்றன. ஆண்டவனே! ஆண்டவனே! இந்த நிலவுலகத்தில் நீரே பழிக்கு அஞ்சுபவர் என்றால் எமது துன்பத்தை உம்மை விட்டு வேறு யாரிடத்தில் சொல்லுவோம்.

அடுத்த தோர்தவ வேடமும் புண்டர
  மணிந்த முண்டமு மாய்வெள்ளி யம்பலத்
தெடுத்த தாள்பதித் தாடிக் கடைப்பிச்சைக்
  கிச்சை பேசுமப் பிச்சனெ னச்செல்வீர்
கடைக்க ணோக்கமும் புன்முற லும்முயிர்
  கவர்ந்து கொள்ள விடுத்த கபாலிபோற்
பிடித்த சூலமுங் கைவிட்டி லீரென்றோ
  பிச்சி யாரெனும் பேருமக் கிட்டதே. 33

பொருந்தியதாகிய ஒரு நவவேடமும் திருநீற்றை யணிந்த மொட்டைத் தலையும் உடையவராய் வெள்ளியம்பலத்திலே எடுத்த திருவடியை ஊன்றிக் கான்மாறியாடி வாயில்கள் தோறும் சென்று பெறுகின்ற பிச்சைக்கு இச்சை மொழிகள் பேசும் அந்தப் பித்தனாகிய சிவபெருமானைப் போலச் செல்பவரே! கடைக்கண் பார்வையும் புன்சிரிப்பும் ஆகிய இரண்டையும் பிறரது உயிரைக் கவர்ந்து கொண்டு வரும்படி விடுத்த கையில் கபாலமுடைய சிவபிரானைப் போலப் பிடித்துள்ள சூலப்படையை யும் கைவிடாமல் இருக்கின்றீர் என்றோ பிச்சியார் என்னும் பெயரை உமக்கு வைத்தது!

இடங்கொண்ட மானும் வலங்கொண்ட
  வொண்மழு வுமெழுதும்
படங்கொண்டு வந்தனை யானெஞ்ச
  மேயினிப் பங்கயப்பூந்
தடங்கொண்ட கூடற் சவுந்தர
  மாறர்பொற் றுள்பெயர்த்து
நடங்கொண்ட தோர்வெள்ளி மன்றே
  றுதுமின்று நாளையிலே. 34

இடது கையிற் கொண்டுள்ள மானையும் வலது கையிற் கொண்டுள்ள ஒளிவிசுகின்ற மழுவையும் எழுதிய சிவபெருமானுடைய படத்தைக் கொண்டு வந்தாய். மனமே! இனிமேல் பொற்றாமரைத் தடாகத்தையுடைய கூடற்பதியிலே எழுந்தருளியுள்ள சவுந்தர பாண்டியராகிய சோமசுந்தரக் கடவுள் தமது அழகிய திருவடியை மாற்றி வைத்து நடனமாடிய ஒப்பற்ற வெள்ளியம்பலத்தில் இன்றைய நாளிலேயே ஏறிவிடுவோம்.

இருநில னகழ்ந்ததொரு களிறுவெ ளிறும்படியொ
ரிருளியி னணைந்த ணையுமாக்
குருளையை மணந்தருளி னிளமுலை சுரந்துதவு
குழகரி துணர்ந்தி லர்கொலாம்
கருகியது கங்குலற வெளிறிய துகொங்கைசில
கணைமதன் வழங்க வவைபோய்
உருவிய பசும்புணின்வெ ணிலவனல் கொளுந்தியதெ
முயிர்சிறி திருந்த தரிதே. 35

பெரிய நிலத்தைத் தனது கொம்பினுற் குத்திப் பிளந்த ஒப்பற்ற வராகமூர்த்தி வெண்ணிறம் அடையும்படி ஒருவராக உருவத்தில் வந்து தம்மைத் தழுவிய பன்றிக் குட்டிகளைச் சேர்ந்து கருணையினுலே இளமையான கொங்கைகளில் பால் சுரக்கச் செய்து உதவிய பேரழகை உடைய வராகிய சொக்கேசப் பெருமான், இராப்பொழுது இருளாற் கருகியதையும் எனது கொங்கைகள் பசலையால் வெளுத்ததையும் மன்மதன் சில அம்புகளை விட அவை சென்று பாய்ந்ததனுல் உண்டாகிய பச்சைப் புண்ணில் வெண்மையான சந்திரன் உமிழுகின்ற தீப்பற்றியதையும் அதனுல் வருத்தப்பட்டு எமது உயிர் சிறிதளவாக அரிதில் இருந்ததையும் அறிந்திலர் போலும்?

அருநாம மரசிவசங் கரநாம மெனக்கொண்
டவற்றெருநா மம்பகர்ந்தோர்க் கரியயனிந் திரனும்
பெருநாமங் கொடுத்தவர்தங் கருநாமந் துடைக்கும்
பெற்றியார் தமிழ்மதுரைக் கொற்றியார் கேளீர்

ஒருநாமம் பயந்தவர்முன் றருநாமம் வியந்திங்
குலகரிடு நாமமதொன் றுள்ளநீர் வெள்ளைத்
திருநாம மிட்டவன்றே கெட்டவன்றே விமையோர்
தெரித்திடுநா மமுமுனிவோர் தரித்திடுநா மமுமே. 36

அரிய திருநாமங்களாக அர, சிவ, சங்கர நாமங்களைக் கொண்டு அவற்றிலே ஒரு நாமத்தை ஓதியவர்களுக்குத் திரு மால், பிரமன், இந்திரன் முதலிய பெயர்களையும் அவ்வப் பதவி களையும் கொடுத்து அவர்களது மறுபிறப்பென்னும் பெயரையும் ஒழித்து முத்தியை வழங்குகின்ற பெருமையை உடையவராகிய சொக்கேசப் பெருமானது செந்தமிழ் வழங்கும் மதுரையம்பதியி லுள்ள கொற்றியார்களே! கேட்பீர்களாக. பெண் என்று சொல்லுகின்ற ஒரு பெயரையும் பெற்றோர்கள் குழந்தைப் பருவத்தில் இட்டழைத்த பெயரையும் உலகத்தார் உமது அழகு முதலியவற்றைக் கண்டு வியந்து இப்பொழுது வைக்கும் ஒரு சிறப்புப் பெயரையும் உடைய நீர் வெண்ணிறமாகிய திரு நாமத்தை நெற்றியில் தரித்துக் கொண்ட அப்பொழுதே தேவர் களுக்கு உடையதான பெரிய புகழும் முனிவர்களுக்கு உள்ள தான கீர்த்தியும் அழிந்தனவன்றோ?

மும்மைத் தமிழ்க்கூடன் மூலலிங்கத் தங்கயற்க
ணம்மைக் கமுதா மருமருந்தை – வெம்மைவினைக்
கள்ளத் திருக்கோயிற் காணலாங் கண்டீர்நம்
உள்ளத் திருக்கோயி லுள். 37.

இயல், இசை, நாடகமென்னும் முத்தமிழும் வளருகின்ற கூடற் பதியிலே யுள்ள எல்லாவற்றிற்கும் மூலமாயுள்ள சிவ லிங்கத் திருமேனியிலே எழுந்தருளி யுள்ள அங்கயற் கண்ணம் மைக்கு அமுதம் போன்றவராகிய அரிய மருந்தை யொத்த சொக்கேசப் பெருமானை நமது மனமாகிய அழகிய கோயிலின் உள்ளே கொடிய தீவினைக்குக் காரணமான வஞ்சனையாகிய மாறுபாடு ஒழிந்தால் பார்க்கலாம். இதைக்கண்டு கொள்ளுங்கள்.

உள்ளும் புறம்புங் கசிந்தூற் றெழநெக் குடைந்துகுதி
கொள்ளுஞ்செந் தேறல் குனிக்கின்ற வாபத்திக் கொத்தரும்ப

விள்ளுங் கமலத்தும் வேத சிரத்தும்விண் மீனைமுகந்
தள்ளுங் கொடிமதிற் பொற்கூடல் வெள்ளி யரங்கத்துமே. 38

மெய்யடியார்களது அகமாகிய மனமும் புறமாகிய உடம்பும் கனிந்து நெகிழ்ந்து விரிந்து ஊற்றுநீர் போலக் கரைந்துருகும்படி குதிகொள்ளுகின்ற சிவந்த தேன்போன்ற சொக்கேசப் பெருமான் பத்தியாகிய பூங்கொத்துக்கள் தோன்ற மலருகின்ற மனத்தாமரையிலும் வேதங்களின் முடிவிலும் ஆகாயத்திலுள்ள நட்சத்திரங்களை மொண்டு அள்ளுகின்ற கொடிகள் கட்டிய மதில்களையுடைய அழகிய மதுரையம்பதியிலுள்ள வெள்ளியம்பலத்திலும் நடனமாடுகின்ற விதம் என்ன வியப்பு.

அரங்க மையற்கு வெள்ளிய ரங்கமே
ஆல யம்பிற வெள்ளிய ரங்கமே
உரங்கொள் பல்கல னென்பர வாமையே
உணர்வு ருமையு மென்பர வாமையே
விரும்பு பாடலு மாகவி மானமே
மேவு மானமு மாகவி மானமே
திருந்து தானந் தடமதிற் கூடலே
செயற்கை வெள்ளித் தடமதிற் கூடலே. 39

தலைவனுகிய சொக்கேசப் பெருமானுக்கு நடனமாடுகின்ற இடமும் வெள்ளியம்பலமாகும். அவர் எழுந்தருளி யிருக்கின்ற திருக்கோயில் அவரையன்றி வேறு எவரையும் தலைவராகக் கருதாத அடியார்களது மனமாகும். அவரது திருமார்பில் அணிந்து கொள்ளுகின்ற பலவகையான அணிகலன்கள் எலும்பும் பாம்பும் ஆமையோடுமாகும். நான் சிவஞானத்தை அடையாமைக்குக் காரணம் எனது வழிபாடு செய்யாமையாகிய குற்றமாகும். அவர் விரும்புகின்ற பாடலும் பெருமையுடைய சிறந்த செய்யுள்களேயாகும். அவர் எழுந்தருளியிருக்கின்ற விமானமும் பெரிய வானத்திலிருந்து வந்த இந்திர விமானமாகும். அவருக்குத் திருத்தமாயுள்ள மூலத்தானம் பெரிய மதிலையுடைய மதுரையம்பதியாகும். வெள்ளியங்கிரியாகிய பெரிய இடத்தில் அவர் எழுந்தருளியிருப்பது அவருக்குச் செயற்கையேயாகும்.

கூடார் புரந்தீ மடுக்கின்ற துஞ்சென்று கும்பிட்டவோர்
ஏடார் குழற்கோதை யுயிருண்ப தும்மைய ரிளமுரலே
வாடாத செங்கோல் வளர்ப்பீ ரெனக்கன்னி வளநாடெனும்
நாடாள வைத்தாளு நகையா தினிப்போடு நகையாடவே. 40

பகைவரது முப்புரங்களில் தீப்பற்றும்படி செய்து எரித்ததும் வந்து வணங்கிய ஒரு மலர்சூடிய கூந்தலையுடைய பூமாலை போன்ற இப்பெண்ணினுடைய உயிரைக் குடிப்பதும் தலைவராகிய உமது புன்சிரிப்பேயாம். தளராத செங்கோலை வளர்ப்பீரென்று கருதிக் கன்னிநாடாகிய வளநாட்டை நீர் ஆளும்படி வைத்தவளாகிய தடாதகைப்பிராட்டி பரிகாசம் செய்யாதிருக்கும்படி இனிமேல் இனிமையான புன்முறுவல் செய்வீராக.

---

(தொடரும்)

# நச்சுப் பொய்கை

வித்துவான். திருமதி. விஜயசரஸ்வதி அவர்கள்,
தமிழாசிரியை, கோபாலபுரம் மகளிர் உயர்பள்ளி, சென்னை.

ஒரு மருந்துக் கடையில் பல மருந்துகள் இருப்பினும் அதன் பெயர்களும் குணங்களும் தெரிந்த ஒருவன் தனக்கு வேண்டிய பொருளைத் தேடிப் பெறும் அறிவுடையவன் ஆகின்றான். மருந்துக் கடையில் நச்சுப் பண்டங்களும் நல்ல பண்டங்களும் கலந்துதான் இருக்கின்றன. அவற்றில் நச்சுப் பண்டங்களை நீக்கி நல்ல பண்டங்களைப் பெறுபவனே அறிவுடையவன்.

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."
—திருவள்ளுவர்

நலம் நாடிச் செல்லும் அறிவுடையோர்க்கு அறம், பொருள், இன்பம், விடு என்ற நான்கும் இதைப் போன்று வாய்க்கும். அறத்தின் நெறிகளில் வாழும் மக்கள் நச்சுப் பண்டங்களைத் தவிர்த்து நல்ல பண்டங்களை எளிதில் பெறுகின்றார்கள். இது நமது இதிகாச புராணங்களில் கண்ட சான்று.

உலகு, உயிர், கடவுள் முதலியவற்றை அறிவுறுத்தும் கல்வி ஒன்று; கற்றதை நிகழ்ச்சியில் கூட்டவல்ல இல்வாழ்வு மற்றொன்று; இல்வாழ்வால் பெறும் அன்பால் உயிர்கட்கு உதவும் அறம் வளர்ப்பது இன்னொன்று; அதன்வழி அழுக்காறு, அவா, வெகுளி முதலிய மாசுகளினின்றும் விடுதலை அடைந்து எவ்வுயிரினும் சத்தெனும் செம்பொருள் பொலிவது கண்டு, உயிர்கட்குச் செந்தண்மை பூண்டொழுகும் முடிந்தநிலை எய்துவது வேறொன்று.

இத்தகைய முதிர்ந்தநிலை பெற உறுதுணை புரிவது பொது நலத்தை அடிப்படையாகக் கொண்ட கடமைகள் ஆகும்; அத் தகைய கடமைகளைச் செவ்வையாகச் செய்வது தான் அறம் எனப்படுவது.

உலகில் இன்று பலகோடி மக்கள் இருக்கிறார்கள். அவர் களில் ஒரு சிலர் எப்போதும் வாழத் தெரிந்தவர்களாக இருக் கிறார்கள். சிலர் ஒருவகையால் வாழ்ந்து, மற்றொரு வகையால் வாழத் தெரியாமல் இருக்கிறார்கள். மற்றும் பலர் பெரும்பாலும் ஒரு பொழுதும் வாழத் தெரியாதவர்கள் என்ற நிலையிலேயே நின்று விடுகிறார்கள்.

"ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப
கோடியும் அல்ல பல."

—*திருவள்ளுவர்*

இந்த மூவகை மக்களது அறிவு எவ்வளவோ எண்ணு கின்றது. அவர்களது உள்ளங்கள் எவ்வளவோ உணர்கின்றன. அவற்றுள் பல எண்ணங்களும் உணர்வுகளும் தீமை விளைப்பன வாக உள்ளன. சில எண்ணங்களும் உணர்வுகளும் நன்மை பயப்பனவாக உள்ளன. இவ்வாறெல்லாம் எண்ணுவதும், உணர்வதும் மக்களுக்கு இயல்பே. ஆகையால் தான் மன் என்பதைப் பகுதி யாக்கி நினைத்தல் என்று பொருள் கண்டு, 'மனிதன்' என்றும் கூறியுள்ளனர்.

இத்தகைய இயல்புடைய மக்கள் விரும்பிய வாறெல்லாம் வாழ இயலும் என்று நம்பியே வாழ்க்கைப் பயணத்தைத் தொடங்குகிறார்கள். ஆனால், காலப் போக்கில் சில வகையான கட்டுப்பாடுகட்கு உட்பட்டே வாழ்வு வேண்டும் என்று அவர்கள் கற்றுக் கொள்கிறார்கள். அதனால், அவர்கள் உள்ளும் புறமும் உண்மையைக் கடைப்பிடித்து, அன்பைப் பெருக்கி, எவ்வுயிர்க் கும் இன்பத்தைப் பெருக்க வேண்டும் என்று தெளிந்து, தமக்குத் தாமே சில வரையறைகளுக்கு உட்பட்ட ஒழுக்கங் களைப் படைத்துக் கொள்ளப் பழகுகிறார்கள். அந்த வரையறை களைப் படைத்துத்தரக் காலமும், இடமும், பொருளும், உடலும், உள்ளமும் துணை புரிகின்றன. அவ்வாறு படைக்கப்பட்ட வரையறைகளுக்குட்பட்டு முடிந்தால் தீயனவற்றை அழிக்கவும்,

முடியாவிட்டால் அவற்றைப் புறக்கணிக்கவும் பழகுகிருர்கள். இவ்வாறு தூயன எண்ணப் பழகுதலும், இனியன சொல்லப் பழகுதலும், நல்லன செய்யப் பழகுதலும் மக்களுக்குக் கடமைகளாக அமைகின்றன. இதுவே அறம் என்று பெயர் பெறுகின்றது.

"மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற". — திருவள்ளுவர்

பாண்டவர்களுடைய காட்டு வாழ்வில் பன்னிரண்டு ஆண்டுகள் முடியும் காலம் நெருங்கிற்று. ஒரு நாள் காட்டில் வசித்து வந்த ஓர் ஏழை வேதியனுடைய அரணிக் கட்டையின் மேல் ஒரு மான் உடலை உராய்ந்து விட்டுத் திரும்பிச் செல்லும் போது அரணிக் கட்டை அதன் கொம்பில் மாட்டிக் கொண்டது.

கொம்பில் அரணிக்கட்டை மாட்டிக் கொண்டதும் மான் மிரண்டு வேகமாக ஓடிற்று. வேதியன் "ஐயோ, என் அரணியைத் தூக்கிக் கொண்டு போய் விட்டதே. வேள்வித் தீ மூட்டுவதற்கு நான் என்ன செய்வேன் ?" என்று கத்திக் கொண்டு பக்கத்தில் ஓடிக் குடிசையில் வசித்து வந்த பாண்டவர்களிடம் முறையிட்டான்.

பாண்டவர்கள் மானைப் பிடிக்க ஓடினுர்கள். அரணியைத் தூக்கிக் கொண்டு போன மாய மான் துள்ளிக் குதித்து வேகமாக ஓடப் பாண்டவர்கள் காட்டில் நீண்ட தூரத்திற்கு வந்து விட்டனர்.

அவர்கள் மிகக் களைப்படைந்து ஓர் ஆலமரத்தடியில் உட்கார்ந்தார்கள். எல்லோரும் நீர்வேட்கையால் வருந்தினுர்கள். நகுலன் தருமனைப் பார்த்து "அந்த வேதியனுக்காக இந்தச் சிறிய செயலைக் கூட நம்மால் செய்து முடிக்க இயலாமல் போய் விட்டதே! நாம் இந்த நிலையை அடைந்து விட்டோமே"! என்ருன்.

இவ்வாறு நகுலன் வருத்தப்பட்டபோது பீமன் "திரௌபதியை அவைக்கு இழுத்து வந்தார்களே! அப்போதே நாம் அந்தக் கயவர்களைக் கொன்றிருக்க வேண்டும்! அதைச்

செய்யாதபடியால் அல்லவா நாம் இந்தத் துன்பங்களை அடைந்தோம்?'' என்று சொல்லி அருச்சுனனை வருத்தத்தோடு பார்த்தான்.

“ஆம்! அந்தத் தேரோட்டிமகன் கூறின கடுஞ்சொற்களைக் கேட்ட பின்னும் நான் வீணே நின்றேன். அதனால் இந்த நிலைமையில் இருக்கிறோம்'' என்றான் அருச்சுனன்.

அவர்கள் களைப்பினால் பொறுமையும் வீரமும் இழந்திருப்பதைக் கண்ட தருமனுக்கு ஒன்றும் கூறத்தோன்றவில்லை. பொறுக்க முடியாத நீர் வேட்கை அவனை வாட்டிற்று. நகுலனைப் பார்த்து, “தம்பி! அந்த மரத்தின் மேல் ஏறி அண்மையில் எங்கேனும் தண்ணீர் அருந்தக் குளமாவது, ஆறுவது இருந்தால் கண்டு சொல்'' என்றான்.

நகுலன் மரத்தின் மீது ஏறிப் பார்த்துவிட்டு இறங்கி வந்து, “தண்ணீரை அடுத்து வளரும் செடிவகைகளும் கொக்குகளும் அருகில் தென்படுகின்றன. அங்கு உறுதியாகத் தண்ணீர் இருக்கும்'' என்றான்.

“விரைந்து சென்று அங்குத் தண்ணீர் கிடைக்கப்பெற்றால் கொண்டுவருக'' என்று தருமன் கூற நகுலன் விரைந்து சென்றான்.

சென்றவன் ஒரு குளத்தைக் கண்டான். மிகவும் மகிழ்ச்சி அடைந்தான். நீர் குடித்துவிட்டுத் தனது அம்புத் தூணியிலும் தண்ணீர் நிரப்பிக் கொள்ளலாம் என்று நகுலன் குளத்தில் இறங்கினான். தெள்ளிய நீரைக் கையில் அள்ளினான். ஒரு விண்ணொலி கேட்டது.

“குளம் எனக்கு உரிமை உடையது மகனே! எனது கேள்விக்கு விடைகூறிவிட்டுப் பிறகு தண்ணீரைக்குடி!'' என்றது.

நகுலன் திடுக்கிட்டான்; ஆனால் நீர்வேட்கையால் உந்திச் சென்ற அவன் அதைக் கவனியாமல் நீரை அள்ளிக் குடித்தான். ஆனால் கரை ஏறியதும் மயக்கம் அடைந்து விழுந்தான்.

தம்பி வரவில்லையே என்று தருமன் சகதேவனை அனுப்பினான். அவன் குளத்தின் அருகில் சென்றதும் மண்ணில் விழுந்து

கிடந்த அண்ணனைக் கண்டான். அவனை எவனோ கொன்று விட்டான் என்று நினைத்தான். நீர்வேட்கையால் உந்தப்பட்டு அவனும் தண்ணீர் குடிக்கச் சென்றான்.

விண்ணொலி முன்போலவே "சகதேவா! இது எனது குளம். எனது வினாவிற்கு விடை கூறிய பிறகே நீர் அருந்தலாம்" என்றது.

சகதேவனுக்கு வேட்கை விடம் போல் மிகவே விண்ணொலியின் அறிக்கையைப் புறக்கணித்துத் தண்ணீரைக் குடித்துத் தரையில் விழுந்தான்.

சகதேவனும் திரும்பி வராமை கண்டு தருமன், தம்பி காண்டீபனிடம் "தண்ணீர் கொண்டு வரப் போனவர்கள் திரும்பி வரவில்லை. என்ன காரணமோ அறியவில்லை. நீ சென்று அவர்களுக்கு ஏதேனும் தீங்கு விளைந்ததோ என்று கண்டு வருக!" என்று சொல்லி அனுப்பினான்.

அருச்சுனன் விரைவாகவே சென்றான். குளத்தின் அருகில் தம்பியர் இருவரும் இறந்து கிடப்பதைக் கண்டான். திடுக்கிட்டு இதற்குக் காரணம் யாராக இருக்கலாம் என்று நினைத்துக் கொண்டே நீர் குடிப்பதற்குக் குளத்தில் இறங்கினான். அப்போதும் "நான் கேட்கும் வினாவுக்கு விடை கூறிவிட்டுப் பிறகு நீரைக்குடி. இல்லையானால் நீயும் தம்பியரைப் போல் இறப்பாய்! இது என்னுடைய குளம்" என்றது விண்ணொலி.

தம்பிக்குக் கோபம் மேலிட்டது. "நீ யார்? கண்ணுக்கெதிரில் நின்று தடு! இதோ! இந்தப் பாணங்களால் உன்னைக் கொல்வேன்!" என்று சொல்லி ஒலியின் திக்கில் குறிபார்த்துப் பாணங்களை விட்டான். "உன்னுடைய பாணங்கள் என்னைத் தீண்ட மாட்டா. என்னுடைய வினாக்கட்கு விடை கூறிவிட்டு நீரைக்குடி. அவ்வாறு செய்யாமல் தண்ணீரைக் குடித்தால் வீணில் இறந்து போவாய்" என்றது.

பாணங்கள் வீணாகப் போனதைக் கண்ட பார்த்தன் கோபத்தோடு கடும் போர் புரியக் கருதினான். பெரிய போரில் ஈடுபடுவதற்குள் நீர்வேட்கையைத் தீர்த்துக் கொள்ளக் கருதிக்

குளத்தில் இறங்கித் தண்ணீர் குடித்தான். அந்தோ அவனும் இறந்தான்.

“அப்பா பீமசேனு! பகைவர்களை அழிக்கும் வன்மை உடையவனே! அருச்சுனனும் திரும்பவில்லை! நீ போய்த் தம்பியர் என்னவானுர்கள் என்பதைக் கண்டுவா! காலம் நமக்குக் கெடுதல் பயக்குமாறு உள்ளது” என்ருன் தருமன்.

பீமன் விரைவாகச் சென்ருன். குளத்தின் அருகில் மூன்று தம்பியரும் உயிர் துறந்து விழுந்து கிடப்பதைக் கண்ட பீமனுக்குத் தாங்கவொண்ணுத் துக்கம் மேலிட்டது. “இது யட்சர்களுடைய வேலையாகத்தான் இருக்க வேண்டும்; அவர்களைப் போர்புரிந்து வீழ்த்துவேன்” என்று சூளுரைத்து விட்டு, நாவரட்சியால் நச்சுப் பொய்கையில் இறங்கினுன்.

மீண்டும் விண்ணொலி கேட்டது. “பீமசேனு! இது எனது பொய்கை; எனது வினுக்களுக்கு விடை சொல்லிய பிறகே பொய்கையில் இறங்க வேண்டும். எனது ஆணையை மறுத்து விட்டுத் தண்ணீர் குடித்தால் நீயும் இறப்பாய்!” என்றது.

“நீ யாரடா என்னைத் தடுக்க?” என்று இடி முழக்கம் செய்த பீமனும் நச்சுத் தண்ணீரைக் குடித்துவிட்டுத் தம்பியரைப் போலவே தரையில் விழுந்து மாண்டான்.

“ஒரு நாளும் நடவாத புதுமையாக உள்ளதே! நீண்ட காலமாகியும் சென்ற தம்பியர் மீண்டு வராமல் இருப்பதற்கு என்ன காரணம்? அந்தோ! கோபத்தால் குடிகெட்டுப் போனுரோ! சாபத்தால் சக்தி இழந்து விட்டாரோ!” என்று தருமன் தம்பிகளைத் தேடிக் கொண்டு வந்தான்.

மக்கள் வசிக்காது புள்ளிமான்களும், பன்றிகளும், பறவைகளும் ஓடியாடும் நச்சுப் பொய்கை உள்ள காட்டை அடைந்தான். அழகான பச்சைப் புல், அதன் மேல் விழா முடிந்த இந்திரத்துவசங்களைப் போல் தம்பியர் நால்வரும் வீழ்ந்து கிடப்பதைக் கண்டு வியப்பும், துக்கமும் அடைந்தான். கவலை தாங்காது கண்ணீர் விட்டான். “தம்பி பீமனே! உன் சபதம் எல்லாம் வீணுயிற்றே! காட்டுவாசம் முடியப் போகும் தருணத்தில்

இறந்து விட்டாயே! தெய்வங்கள் தந்த திருவாக்கெல்லாம் பொய்யாகி விட்டதே" என்று தம்பியரைத் தழுவிப் புலம்பினுன்.

"எந்தப் பகைவன் உங்கள் அனைவரையும் கொல்லும் திறமை படைத்தான்!" என்று மீண்டும் மீண்டும் குழந்தை போல விழுந்து அழுதான். "உயிரற்றுக் கிடக்கும் இந்த நகுல சகதேவர்களைப் பார்த்தும் என்னுடைய எஃகு இதயம் வெடிக்காமலிருக்கிறதே! நான் இந்த உலகத்தில் இனி என்ன செய்வதற்காக உயிருடன் இருக்க வேண்டும்?" என்று வருந்தினுன்.

பிறகு நன்ருகக் கவனித்துப் பார்த்து, "இது ஏதோ மாய மாகத் தோன்றுகிறது. இவர்களுடைய உடல்களில் காயம் ஏதுமில்லை. உறங்குகிறவர்கள் போல் முகத்தில் எவ்வித மாறு பாடும் இல்லாமல் கிடக்கிருர்கள். பகைவர்களுடைய காலடிகள் கூட மண்ணில் காணப்படவில்லை. இது துரியோதனனுடைய சதியாகவே இருக்கலாம். தண்ணீரில் நஞ்சு கலந்திருக்கலாம்" என்று தனக்குள் சிந்தித்துக் கொண்டே வேட்கையால் ஏவப் பட்டுப் பொய்கையில் இறங்கினுன். மீண்டும் விண்ணெலி கேட்டது.

"உன் தம்பிகள் எனது பேச்சைக் கேளாமல் தண்ணீர் குடித்தார்கள்; இறந்தார்கள். நீயும் அவ்வாறு செய்யாதே. என் விஞக்களுக்கு விடை கூறிவிட்டுப் பிறகு பொய்கையில் இறங்கி நீரைக் குடி; இது என்னுடைய பொய்கை" என்றது.

தருமன், இது யாரோ யட்சன் குரல் என்று புரிந்து கொண்டு விண்ணெலியின் பேச்சுக்கு இணங்கி, "உன் விஞக் களைக் கேள்" என்ருன்.

'எந்தச் சாத்திரம் படித்து மனிதன் புத்திமான் ஆகிருன்?'

"எந்தச் சாத்திரம் படித்துமல்ல; பெரியோர்களை அடுத்தே மனிதன் புத்திமான் ஆகிருன்"

"காற்றைக் காட்டிலும் வேகம் கொண்டது எது"?

"மனம்."

"மனிதன் எதனுல் எப்போதும் துணையுள்ளவனுகிருன்?"

"மனத்திட்பமே மனிதனுக்குத் துணை."

"புல்லினும் அற்பமானது எது?"

"கவலை."

"இறக்கும் பொழுதுகூட வரும் இனிய நண்பன் யார்?"

"தருமம்."

இதைக் கேட்ட அறக்கடவுள் மகிழ்ச்சியடைந்து தருமனுக்குக் காட்சி தந்து தான் விண்ணொலியில் சோதனை செய்த வரலாற்றைக் கூறியது. தம்பியரின் உயிரை மீட்டுத் தருமனுக்குத் தந்தது என்பது வரலாற்றுக் கதை.

கதையில் வரும் கருத்துக்களைச் சிந்திக்கின்ற காலத்து, மக்கள் அதன் உட்பொருளை நாடிச் சென்று பயன் அடைய வேண்டும் என்பதற்கே கதையில் இவ்வளவு கவசங்களை அணிந்திருக்கின்றார்கள்.

அண்ணன்மார்கள் ஒவ்வொருவரும் தம்பியரைத் தேடிக் கொண்டு குளத்தங்கரைக்கு வருகின்றார்கள். தம்பியர் இறந்ததைக் கண்டு வருந்துகின்றார்கள். அவர்களைக் கொன்ற பகைவர்களை அழித்துவிடப் போவதாக வீரம் பேசி வில்லின் நாணைப் பூட்டுகின்றார்கள். ஆனால் அந்த நீர் வேட்கை அவர்களை விட்டுப் போகவில்லை. அதற்குள் தண்ணீர் குடித்து விட்டு வந்து போர் புரியத் திட்டமிடுகின்றார்கள்.

இதைப் போலவே அறவேட்கையும் மக்களைப் பற்றிக் கொண்டு அவர்கள் திட்டங்களுக்கு முன் நின்றால் நச்சுப் பொய்கையிலும் நல்ல தண்ணீர் பெருக்க நல்லதொரு தருமன் தோன்றுவான் அன்றோ?

"நீரின்ப வெள்ளத்துள் நீந்திக் குளிக்கின்ற நெஞ்சங் கொண்டீர்
பாரின்ப வெள்ளங் கொளப்பரி மேற்கொண்ட பாண்டியனார்;
ஓரின்ப வெள்ளத் துருக்கொண்டு தொண்டரை உள்ளங் கொண்டார்
பேரின்ப வெள்ளத்துட் பெய்கழ லேசென்று பேணுமினே."

— *மணிவாசகர்.*

---

# தமிழில் அறிவியல்

திரு. ப. முத்துக்குமாரசாமி அவர்கள்,
அரசாங்கக் கதர்த் துறை.

இன்றைய தமிழகம் காலத்தால், கருத்தால், இலக்கிய வளத்தால் இற்றைக்கு 2000 ஆண்டுகட்கு முத்தது. உலக நாட்டரங்கிலே நாகரீகம் அரும்பாத காலந்திலேயே தமிழகத்தில் நாகரிகம் அரும்பி முற்றி முதிர்ந்திருந்தது, என்பது நமது பண்டைய இலக்கியங்கள் கண்ட உண்மை. உலகமொழி வழி இலக்கிய இலக்கணங்களைப் பார்த்தால் அந்தந்த நாட்டின் பிறப்பு, வளர்ப்பு, செழுமை இவைகளை வலியுறுத்தும் வண்ணம் அமைந்திருக்கின்றன. அதுபோன்று தண்டமிழ் நாட்டின் சிறப்பும், அதன் வளமையும், செழுமையும் வையகத்தோருக்கு வாரி வாரி வழங்க எத்தனையோ இலக்கிய இலக்கணங்கள் உண்டு. வாழ்வுக்கு இலக்கணம் வகுத்து, களவு, காதல், கற்பை ஒரு பிரிவாகப் பிரித்து அதற்கு அகத்துறைப் பகுதி யெனப் பெயரிட்டு, அறம், மறம், கொடை, அமைச்சு, அரண், தூது, அரசு என வகுத்து புறத்துறைப் பகுதி என வகுத்துக் காட்டிய தொல்காப்பியனுர் முதல் இதனையே பலபட விரித்துக் காட்டவந்த நம்பியகப் பொருள் விளக்கம், இறையனுர் அகப் பொருளுரை, புறத்திரட்டு, புறப்பொருள் வெண்பாமாலை போன்ற இலக்கண வகைகளும் நிறைய உண்டு. இவ் இலக்கண வகைகளை மையமாக வைத்து அகநானூறு, கலித்தொகை, குறுந்தொகை, புறநானூறு போன்ற இலக்கியங்கள் நிறைய வளர்ந்தன. எனவே நமது தமிழ்மொழி போல் இலக்கிய இலக்கணப் புலமையும் செறிவும் உடைய மொழி இந்த வையகத்தில் கிடையாது. வையகத்தை வாழ்வாங்கு வாழவைத்த தெய்விகத் திருவள்ளுவன் யாத்துக்கொடுத்த திருமறையாம் திருக்குறள் தமிழர்களுக்குக் கிடைத்த ஓர் வேதமறையாகும்: தெள்ளுதமிழ் திருவள்ளுவனுடைய திருக்குறளில் நாடுமுதல்

நகரம் வரை, குடிசையில் தொட்டு கோபுரம் வரை நீண்ட அவருடைய ஈரடிக்குறள் கோட்டையும் கொத்தளமும் கோனுட்சி செய்ய வேண்டிய சீரிய பணியை விளக்கிக் காட்டுகின்றது. பொருளாதார தத்துவத்தை உலகப் பேரவைக்கு எடுத்துக் காட்டிய காரல்மார்க்சை வாழ்த்துகின்ற சமுதாயம், காரல் மார்க்சுக்கு ஆயிரம் ஆயிரம் ஆண்டுகட்கு முன்னர் பொருளாதார தத்துவத்திற்கு வித்திட்ட திருவள்ளுவனை மறந்தது உண்மையில் வருந்தத்தக்கதுதான். திருவள்ளுவனைப் பற்றி வாழ்த்த நினைத்த மேலைநாட்டுப் பேராசிரியர் "உலக மக்களின் மாண்பு மறையாம் திருக்குறள் மில்டனின் மகத்துவமும்; அருள்நெறி பரப்பிய தாந்தேயின் சிந்தனையும்; ஓர் உலக ஓர் இனக் கொள்கையை வலியுறுத்திய செகசிற்பியருடைய திறனும்; பண்பட்ட நாகரீகக் கொள்கையை விளக்கிய அரிஸ்டாட்டிலின் மேலாந்தரமும்; அறிவாக்கத்தைத் தெளிவுறுத்திய பிளோட்டோவின் திறமும் குறைவறப் பெற்றிருக்கின்றது" என்று கூறுகின்ருர்.

" The grandeur of a Milton, the grace of a Dante; the Universality of a Shakespeare the Sublimity of an Aristotle, the idealism of a Plato the moral fervour of a Marcus Aurelius are all to be found in a harmonious blending and appropriate proportion in this Bible of Mankind" என்று விளக்கிப் போந்தார். திருவள்ளுவர் தமது பெருமறையை வகுக்கின்ற போது அன்றைய தமிழகத்திற் பண்பாடு, மொழிவழி நாகரிகம், கலாசாரம், தேசீய ஒற்றுமை இவைகளை மையமாக வைத்து யாத்திருக்கின்ருர். "தம்மை மீறிய கட்டுக்கோப்பான உணர்ச்சிவசப்பட்டு, ஒழுங்கு படுத்தப் பட்ட வரையறுக்கப்பட்ட பண்பாட்டின் அடிப்படையில் கவிதை யாத்த" காரணத்தால் தான் வள்ளுவருடைய குறளிலே உயிர்த் துடிப்பு இருக்கின்றது. கவிதை இலக்கணங்களை வகுக்கின்ற I. A. ரிச்சர்ட்சு என்ற பேராசிரியன்,

" Poetry is the result of a more than
Usual state of emotion combined
With more than usual Order"—

என்று வறையறுத்துச் சென்றுள்ளான். ஓர் குல, ஓர் இன வளர்ச்சியை வலியுறுத்தி வையகத்தை வாழவைக்கப் பெருந் தலை மாநாடு கூட்டிப் பாடுபடுகின்ற இந்த நூற்றுண்டுக்கு 1000 ஆண்டுகட்கு முன்னரே தமிழகத்திலே மொழிவழி இன வளர்ச்சியை வலியுறுத்தி வாழவைத்த சிறப்பு புறநானூறு போன்ற இலக்கியங்களுக்கு நிறைய உண்டு. "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற கணியன் பூங்குன்றனர் காலத்தில் பிறந்த ஓர்குல வளர்ச்சி "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்ற திருமூலர் காலத்திலே வளர்ந்து செழித்து "காக்கை குருவி எங்கள் சாதி, காடு மலைகள் எங்கள் கூட்டம்" என்று முதிர்ந்து வந்திருக்கின்றது.

தித்திக்கும் தேனினும் தேன்தமிழில் திருவாசகத்தை வகுத்துக் கொடுத்த வாதவூரர் பெருமான் "தென்னாடுடைய சிவனே போற்றி எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி" என்று பொன்னுரையாய்ப் போற்றித்தந்தார். கங்கைக்கரையிலே நடந்த சரித்திரக் கதையை, கவிதையாக்க முனைந்த கம்பனும், கங்கையை அறிமுகப்படுத்தும் போதும், கோசல நாட்டை வாழ்த்த நினைக்கின்ற போதும் காவிரியையும், சோழவள நாட்டையும் இணைத்தே காப்பியத்தை வகுத்திருக்கின்றான். உறவுக்கு இமயத்தை வைத்து உரிமைக்குக் குமரியை காத்து வந்த தமிழினம் காலப்போக்கிலே பையப்பைய நசித்துப் போயிற்று. சாதியின் அடிப்படையில் நாடு, மொழி, இன, நிற வேறுபாடுகளை வகுத்துக்கொண்டு நாட்டிலே நாளுக்கொரு கட்சியும், நேரத்துக்கொரு கொள்கையும் மக்களை மாக்களாக ஆக்கிவிட்டன. உலகநாடுகளைக் காட்டிலும் கலை பண்பாடு நாகரிகம் கலாசாரம், இலக்கியம் இவைகளில் வளர்ந்து, முதிர்ந்த தமிழகம் இன்று காலப்போக்கிலே வளர்ச்சியிலே வீழ்ச்சியடைந்திருக்கின்றது என்று சொன்னல் மக்களிலே ஒற்றுமை இல்லை; என்றுதான் குறை காண நேரிடுகின்றது.

மாங்குடி மருதனர், ஔவையார், நப்பசலையார், நத்தத் தனர், காக்கை பாடினியார் போன்ற ஆயிரம், ஆயிரம் இலக்

கியப் புலவர்களேயும், கன்னித் தமிழ்க் கம்பன், திருத்தக்க தேவன், இளங்கோ, சாத்தனுர் போன்ற காப்பியக் கலேஞர்களே யும் மாண்பு தமிழால் "தெய்வ மறையாத்த மாணிக்கவாசகர், நாவுக்கரசர், சுந்தரர் நாளும் இன்னிசையால் தமிழ்யாத்த சம்பந்தர்" போன்ற அருளாளர்களேயும் வழங்கிய தமிழகம் கடந்த சிலநூற்ருண்டுகளாக மௌனக் கோலத்தில் வாழ்கின்ற இழிவான சூழ்நிலே வேதனேக்குரியது.

வானவெளியில் மாடமாளிகைகள் கட்டிச் சந்திரனுக்கும், சுக்கிரனுக்கும் சுற்றுலா நடத்த நாட்டம் கொண்டு ஆராய்ச்சி முதிர்ந்து வரும் இந்த அறிவியல் நூற்ருண்டிலே நமது நாடு மிக மிகப் பின்தங்கிய நிலேயிலே இருக்கின்றது. கண்மூடிக் கொள்கைகளிலேகாலங்களேக் கழித்துவறட்டு வேதாந்தங்களேத் திண்ணேப் பேச்சாகப் பேசி "காயமே இது பொய்யடா காற் றடைத்த பையடா" என்ற நம்பிக்கையிழந்த நாகரிகக் கொள் கைகளே வகுத்துக் கொண்டு நாட்களேப் பாழாக்கி விட்டார்கள் நாட்டிலே. வானவெளியில் முதன்முறையாகச் சுற்றிவந்துவிட்ட 'காகரினே' உலகம் வெற்றிவாகை சூடி வாழ்த்துகின்றது. மனித இன நலத்தின் அடிப்படையில் காகரினுடைய சாதனே மிகப் பெரியது. ஆனுல் காகரின் முன்னேடிகளுக்கு வானவெளி களில் பறக்க முடியுமென்ற அரிச்சுவடியைக் கற்றுக் கொடுத்த பெருமையே தமிழகத்தைத் தான் சேரும். திருத்தக்க தேவரின் மயிற்பொறியின் முதிர்ந்த வளர்ச்சியே இன்றைய காகரினின் வான வெளிக் கப்பல் என்பதை மறக்க முடியாது. பெற்றெடுத்த குழந்தையைப் பேணிவளர்க்க முடியாமல், அண்டை வீட்டு ஆயாளிடம் கொடுத்து விட்டு, அக் குழந்தை வளர்ந்து ஆண் அழகனுக மாறிய பிறகு வருந்தும் தாயின் அறியாமையை என்ன வென்று கூறுவது. அதுபோன்றுதான் இன்றைய தமிழ கத்தின் நிலே. திருத்தக்கத் தேவரின் சிந்தாமணியை அலங் காரம் செய்து புத்தகப் பூச்சிகளுக்கு இரையாக்கித், தமிழாசிரியர் களின் பரம்பரையிலே உலவ விட்டு, பதவுரை, தெளிவுரை, கருத்துரை கொண்டு பள்ளிக் குழந்தைகளுக்கு பாடம் சொல்லிக் கொடுத்துக் காலத்தை வீணுகக் கழித்தார்கள். அதேபோன்று தான் மலர்விமானத்தைஅறிமுகப்படுத்திய கம்பனே,அவனுடைய

கன்னித் தமிழ்க் காவியத்தைப் புராணக் குப்பைகளோடு உரையிட்டு, பொட்டிட்டு, பூமாலைபோட்டு பெட்டியில் பூட்டிமகிழ்ந்தார்களே ஒழிய அதில் ஆராய்ச்சி வளரவில்லை. கம்பனையும், திருத்தக்க தேவனையும் ஆராய்ந்திருந்தால் காகரினுக்கு கிடைத்த வாழ்த்துரை தமிழகத்திலே பிறந்த குப்பனுக்கும் சுப்பனுக்கும் கிடைத்திருக்கும். நடந்தவைகள் நடந்தவைகளாக இருக்கட்டும். நடக்க இருப்பவைகள் நல்லவைகளாக இருக்கட்டும். நமது பண்பட்ட பண்டைய தமிழ் இலக்கியத்திலே ஆயிரம் ஆயிரம் அறிவியல் கருத்துகள் நிறைய உண்டு. திருக்குறள் முதல் திருவாசகம் வரை எத்தனையோ அறிவியல் கருத்துக்களைத் தன்னகத்துக் கொண்டு நம்மிடையே இருக்கின்றன. அவைகளையெல்லாம் நாம் நன்றாகப் பயன் படுத்தி வளருகின்ற பரம்பரையிலே ஆயிரம் ஆயிரம் எடிசன்களையும், ஐன்ஸ்டின்களையும், நியூடன்களையும், கியூரிகளையும் படைக்க வேண்டும். அறிவியல் கருத்துக்களுக்கு அயல் நாட்டுக்குப் படை யெடுக்கும் பத்தாம் பசலிக் கொள்கைகள் ஒழிந்து நமது நாட்டு அறிவியல் கொள்கைகளைப் போற்றி உலக நாடுகளுக்குப் பறைசாற்ற வேண்டும்.

---

# இருபாவையில் இயைந்த கருத்துக்கள்

சைவப்புலவர் பண்டித,
திரு. அ. சிவசுப்பிரமணிய பிள்ளை அவர்கள்,
சமயச் சொற்பொழிவாளர், நாகர்கோயில்.

இருபாவை யென்பது ஒன்று திருவெம்பாவை, மற்றென்று திருப்பாவை. திருவெம்பாவையை அருளியவர் மாணிக்கவாசக சுவாமிகள். திருப்பாவையை அருளியவர் ஆண்டாள் நாச்சியார். திருவெம்பாவை 20 பாடல்களையும் திருப்பாவை 30 பாடல்களையுமுடையது. இவ்விரண்டிலும் பக்திச் சுவை பருகப்பருகத் தனியின்பம் பயக்கும். இரு பாவைகளும் தமிழ்ப்பெருஞ் சுவையும் கலந்து அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையாகவும், சஞ்சலம் தீர்க்கும் மருந்தாகவும், தேன் கலந்துபால்கலந்து செழுங்கனித் தீஞ்சுவை கலந்து உவட்டாமல் இனிக்கும் தன்மையுடையன. சிந்திப்பவர்க்குச் சிறந்த செந்தேனை முந்திப் பொழிவனவாகவும் இறைவனோடு இசைவிக்கும் தன்மையுடையனவாகவும் அமைந்துள்ளன.

பாவையில் இறைவனைத் தலைவனாகவும் தன்னைத் தலைவியாகவும் எண்ணிப் பாடியுள்ளார். இறைவனை ஆண்டான் அடிமை முறையில் பாடுவதே சிறந்தது. ஆனாலும் நாயகன் நாயகியாகப்பாடுவது சாலச்சிறந்ததாகும். ஏனெனில் இறைவன் உலகிலுள்ள அனைத்துயிர்க்கும் நாயகனல்லவா? மாணிக்கவாசக சுவாமிகள் தன்னை நாயகியாகவும், இறைவனை நாயகனாகவும் எண்ணிப் பாடியருளினார். ஆண் தன்னைப் பெண்ணாக பாவித்துப் பாடுதலை மேட்டு மடை என்றழைப்பார்கள். ஆண்டாள் நாச்சியார் பெண்ணாகையால் இறைவனை நாயகனாகவும் தன்னை நாயகியாகவும் பாவித்துப் பாவையைப் பாடியருளினார். இதைப் பள்ள மடை என்றழைப்பார்கள். இவையிரண்டும் இறைவன்பால் அன்பு கொள்ளும் முறையைப்பற்றிக் கூறுவதேயாகும். காலத்தினால் வேறு பட்டதே தவிர இரண்டும் இயைந்த கருத்

துக்களைத் தன்னுள் அடக்கி ஆண்டவனோடு ஆன்மாக்கள் பொருந்தும் முறையில் அருள் வடிவாம் பரத்தையடையவும் நம்மை இப்பவத்தில் சேராவகை எடுத்து சித்தத்துத் தன்னை வைத்தருளினாலே தாளிணை நம்தலைமேற் சூட்டி ஆட்கொள்ளும் திறத்தினைக் கூறுவனவாகும்.

திருவெம்பாவையை அருளிய மாணிக்கவாசக சுவாமிகள் பாவையடங்கிய திருவாசகத்தையும், திருக்கோவையாரையும் அருளிச்செய்தார். அவர் இவ்வுலகில் 32 ஆண்டுகள் வாழ்ந்து தில்லையம்பலவரின் இணையடியில் இரண்டறக் கலந்தார். ஆண்டாள் நாச்சியாரும் திருப்பாவை திருமொழி என்ற இரு பிரபந்தங்களை யருளிச் செய்து இவ்வுலகில் 15 ஆண்டுகள் வாழ்ந்து அரங்கநாதரின் திருவடியிலே இரண்டறக்கலந்தார்.

பாவை பாடிய வாய் என்று இறைவனால் அழைக்கபட்ட மணிவாசகப்பெருமான் பல புண்ணியத் தலங்களையும் வணங்கிக் கொண்டு திருவண்ணாமலைக்கு வந்தார். அப்போது மார்கழி மாதம். திருவாதிரைக்கு முந்திய பத்து நாளும் பெண் களில் பலர் அதிகாலையிலெழுந்து வீட்டைச்சுத்தம் செய்து மெழுகிக் கோலமிட்டுத் தெய்வத்தை வரவழைத்து விளக்கேற்றி நீராடச் சென்றார்கள். நீராடியபின் மணலில், பெண்கள் தேவி யின் உருவம் சமைத்து வழிபட்டார்கள். அவர்கள் வாயில் அரன் புகழ் இன்னிசையோடு திகழ்வதைக் கண்டார். அப் பெண்கள் பாடியதாகத் தாம் பாடியருளினார்.

திருவெம்பாவையின் உட்கருத்து சக்தியை வியந்தது என்பர். பிரபஞ்சத்திற்கு அனுக்கிரகம் செய்யத் திருவருளினால் ஒரு சக்தி மற்ற சக்தியைத் துயிலெழுப்ப இவ்வாறு நவசத்தி கள் துயிலெழுப்ப அநந்த தேவராலே அசுத்த மாயை காரியப் பட்டு நிலம் முதல் நாதம் ஈருன பிரபஞ்சம் உண்டாகிறது. இவ்வாறு ஒரு சக்தி ஒரு சக்தியை துயிலெழுப்புவதே தத்துவக் கருத்து. இதனைப்பற்றித் திருப்பெருந்துறைப் புராணம் உடையார் “மலவிருள் உற்று உறங்காமல் மன்னுபரிபாகர் அருள் செல முழுகவருக எனச் செப்பல் திருவெம்பாவை” என்று கூறுவர்.

சூடிக் கொடுத்த சுடர்க்கொடியாம் ஆண்டாள் நாச்சியார் திருப்பாவையில் மார்கழி மாதத்தில் பெண்கள் கைக்கொண்டு ஒழுகிவரும் நோன்பைப்பற்றி அருளியுள்ளார். பெண்கள் அதி காலையிலெழுந்து நீராடி ஈரமணலில் காத்யாயினிதேவியின் திரு வுருவைச் சமைத்து அதனை வழிபட்டனர். தங்களுக்கு கண்ண பிரானைக் கணவனுகத் தரவேண்டுமென்றும் தேவியை வேண் டினுர்கள். இம்முறையில் கண்ணனைப் பற்றிப் பாடியருளியது திருப்பாவையாகும்.

இருபாவையிலும் கன்னிப்பெண்கள் ஒன்று கூடி நாட்டில் மழை பெய்யுமாறும் பஞ்சம் நீங்குமாறும் நோய், பகை இவை நீங்குமாறும் பொதுவாக இறைவனிடம் வேண்டியும் சிறப்பாகத் தங்களுக்கு நல்ல நாயகனைத் தந்து நல்வாழ்வு வாழத் துணை புரியும்படி வேண்டியும் அதிகாலையிலெழுந்து ஒருவரை யொருவர் எழுப்பி எல்லோரும் சென்று ஆற்றை யடைந்து நீராடி இறைவனை வாழ்த்துவதும் அவனருளை வேண்டி வழி படுவதும் கூறப்படுகின்றன.

இப்பாவைகளைப் பாடுவது மார்கழி மாதம் ஆகும். இது தேவர்களுக்கு விடியற்காலமாகும். இவர்களும் இறைவனைத் துதிக்கும் காலமும் இந்நேரமே. நாமும் இந்நேரத்தில் பாடுவது நல்லதே. இப்பாவைகளில் முதல் சில செய்யுட்களில் பெண் களின் இயல்பும், துயிலெழாதவர்களைத் துயிலெழுப்புதலும், அவர் களிடையே நடைபெறும் உரையாடல்களும் எல்லோரும்சென்று இறைவன் புகழ்பாடி நீராடச் செல்லுதலும் பின்பு குளிர்ந்த நீரில் குளித்தலும், குளிக்கும்போது இறைவனின் அருள் திறத்தினை யும் அவனுடைய எல்லையில்லாப் பெருமைகளையும் உயிர்களி டத்தில் செய்யும் கருணையையும் அளப்பரியதோற்றத்தினையும் திருவடியின் பெருமையையும் கூறுகின்றன. ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் எம்பாவாய் என்றழைப்பதினுல் இதற்குத் திருவெம்பாவை என்று பெயர் வந்தது.

இனி, பாவைகளில் கூறும் கருத்துக்களைப் பார்ப்போம். பெண்கள் அதிகாலையிலெழுந்து தன் தோழியை எழுப்பவரும் போது எம்பெருமானின் நாம ஒலி சிவனே சிவனே என்றும்

அரி அரி என்றும் கேட்கிறது. இவைகளைக் கேட்டுக்கொண்டு இன்னுமா எழுந்திராமல் படுக்கையில் புரண்டு கொண்டிருக்கிருய்? சிக்கிரமாய் எழுந்துவா இறைவனின் புகழைப் பாடுவோம் என அழைக்கிருர்கள்.

காலையில் கோயில்களில் காலைச் சங்குகள் முழங்குகின்றன. பறவைகளும் கூச்சலிடுகின்றன. இவை உனக்குக் கேட்கவில்லையா? கல்நெஞ்சத்தோடு இன்னுமா உறங்குகின்ருய். இறைவனுடைய நாமம் உன்னுடைய இதயத்தின் வெப்பத்தைக் குளிரச் செய்யுமே. நீ இறைவன் நாமத்தைக் கூறும்போதே தீயிலிட்ட மெழுகினைப்போல உருகுவாயே. அப்படிப்பட்டவளா இன்னும் உறங்குகிருய் சிக்கிரமாய் எழுந்துவா, என்கிருள்

கோயிலில் முரசங்கள் ஒலிக்கின்றன. பெண்கள் தயிர் கடைகிருர்கள். இறைவனின் இணையற்ற புகழ்பாடுகிருர்கள். நீ கேட்டவாறு உறங்குகிருயே. இது என்ன உறக்கம் இறைவன் மீது உனக்கு இருக்கும் அன்பு இவ்வளவு தானு? என்ன பயன் கருதி இவ்வாறு உறங்குகிருய். விரைவாக வந்து கதவைத் திற என்றழைக்கிருர்கள்.

இறைவா! உன் அறக் கருணையை எல்லோருக்கும் விளங்கும்படி நாங்கள் பாடி வருகிரும். உன் கருணையால் வாழ்ந்து வருகிரும். உன்னருள் விளையாட்டில் உய்யும் வழிகளிலெல்லாம் உய்ய முயற்சி செய்து வருகிரும். எங்களை நீ காப்பாற்ற வேண்டும். அதற்காக நாங்கள் குளிர்ந்த நீரில் உடல் நடுங்க கையால் தண்ணிரைக் குடைந்து குடைந்து ஆரவாரம் செய்து நீராடும்போதும், முகேர் என்று முழ்கும்போதும் உன்புகழையே தினமும் சொல்லி வருகிரும். எங்களைத் தவருமல் காப்பது உன் பொறுப்பு என்று வேண்டிக் கொள்கிருர்கள்.

இன்னும் இக்கன்னிப் பெண்கள் இறைவனை வழிபடும்போது சில நோன்புகளையும், உறுதிகளையும் கைக்கொள்கிருர்கள். அவை நடைபெற இறைவனை வேண்டிக்கொள்கிருர்கள். அவ்வுறுதிகளை நாமும் கைக்கொள்ளல் அவசியம். தினமும் இறைவனின் திருவடிகளைப் பாடுவோம். நெய் பால் இவை

உண்ண மாட்டோம். அதிகாலையில் நீராடுவோம். கண்களுக்கு மைதீட்ட மாட்டோம். கூந்தலுக்கு மலர்களைச் சூட்டி அழகு செய்யமாட்டோம். சான்றோர்கள் செய்யத் தகாதவை என்று விலக்கியவைகளைச் செய்யமாட்டோம். தானம், தவம், வழிபாடு இவைகளை நாங்கள் இயன்றவரையில் செய்வோம். நாங்கள் உன்னடியார்களைத் தான் மணம் செய்வோம். எங்கள் கைகள் இறைவனுடையத் திருப்பணியைத் தான் செய்யும். இறைவன் திருமேனியைத் தவிர வேறெதையும் நாங்கள் பார்க்க மாட்டோம். இவ்வுறுதிகளைக் கொள்கிறோம். இவைகளைத் தந்து எங்களைக் காக்கவேண்டும். இவைகளைத் தந்தால் எங்களுக்கு ஒருவிதக் கவலையுமில்லை. இவைகளைத் தாவென்று கேட்கிறார்கள்.

இத்தகைய சீரிய கருத்துக்களை யுடைய இப்பாவைகளை நாம் பாடி வரவேண்டும். பாடினால் நாட்டில் மழைமிகும். பக்தி ஓங்கும். பசி நீங்கும். பகையொழியும். உலகமெல்லாம் அன்பு கொண்டு பாதுகாவலாகவாழும். இப்பாவைகளை ஊன்றிப் படிப்பார்க்கு இன்னும் மேலான கருத்துக்கள் தெரியாமலிரா. இதனைப்பாடிப் பயன் பெறுவோமாக. வாழ்க உலகெலாம்.

---

# பாட்டியல்

— மதுரகவி மரபினர்: —

திரு. T. N. N. கவிக்குஞ்சரப் பாவலர் அவர்கள்,

மெயின்ரோடு, வாளாடி.

'**பா**ட்டியல்' என்பது பாட்டின் முதற்சீரின் கண் வருதற் குரிய பொருத்தங்களினது இலக்கணம் கூறும் 'நூல்' என விரியும் என்ப. ஈண்டு பாட்டின் முதற்சீரெனக் கூறுவது பாட்டுடைத்தலைவன் மீது பாடப்படும் முதற்பாவின் முதற் சீராம்; பாட்டுடைத் தலைவன்மீது பாடப்படும் நூலின் முதற்சீ ரெனினும் அமையும்.

அஞ்ஞான்று 'இயல், இசை, நாடகம்' எனும் முத் தமிழுக்கு இலக்கணம் யாத்த 'அகத்தியனுர்' எனும் முனிவர் பெருந்தகையும், பாட்டியல் நூல் யாத்திருந்தமை "பாமேவு தமிழ்ப் பொதியக் குறுமுனிவன் கூறும் பாட்டியலைச் சுருக்கம தாய்ப் பகர்ந்திடுவன்யானே" என வரும் சிதம்பரப் பாட்டியல் செய்யுள் அடிகளால் அகத்தியனுர் பாட்டியல் நூல் யாத்திருந் தமை ஐயமறத் தோன்று நிற்கும்.

பொய்கையார், பரணர், இந்திரகாளியார், அவிநயனுர், கல்லாடர், கபிலர், சேந்தம் பூதனுர், கோவூர் கிழார், மாபூதனுர், சீத்தலையார், பல்காயனுர், பெருங்குன்றூர் கிழார், முதலிய பெருந்தகையார் ஒவ்வொருவரும் தனித்தனியே பாட்டியல் நூல் யாத்திருந்தமை பன்னிரு பாட்டியல் மேற்கோட் சூத்திரங் களான் அறியப்பெறுதலானும், பிற்றை ஞான்றுவிளங்கிய சைன, அருகசமயப் புலவர்களும் பாட்டியல் நூல் பகர்ந்திருத் தலானும், நம்வள்ளலார் இராமலிங்க அடிகள் பாட்டியல் கேட்கப் பாடவும் பயந்தேன் எனக் கூறுதலானும், நமது சைவ சமய உயர் ஞானச்செல்வர் குமரகுருபர அடிகளும் பாட்டியல்

முறையைப் பின்பற்றி இருப்பதாலும், பாட்டியல் இத்துணைச் சிறப்புடைத்தென்பது இனிது விளங்கும்.

'எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி' என்னும் ஐந்திலக்கணங்களுக்கப்பால் தனிநூலாய்ப் பாட்டியல் நூல் அமைந்திருப்பதானது நூலின்கண் ஒழிபியல் கூறுவதைப் போன்று ஐந்திலக்கணங்களுக்கப்பால் தனி நூலாய் ஒழிபிலக் கணம் (பாட்டியல்நூல்) உரைத்தார் எனக் கோடல் பொருந்து மாறு காண்க.

சூடாமணி நிகண்டு பல்பெயர்க் கூட்டத்தொரு பெயர்த் தொகுதியில் 96-வது கவியில் கணப்பொருத்தமும், 97- 98 வது கவிகளில் கணங்களுக்குரிய சீர்களும் 102 வது கவியில் நாட் பொருத்தமும், (நட்சத்திரப்பொருத்தமும்) 118 வது கவியில் நூலின் முன்வைத்தற்குரிய மங்கலச் சொற்பொருத்தமும், கூறு தலான் அருகசமயப் புலவர்களும் பாட்டியல் நூலைப் பயின்றனர் என்பது தேற்றம்.

வெண்பாப் பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், இலக்கண விளக்கப் பாட்டியல், நவநீதப் பாட்டியல், வரையறுத்த பாட்டியல், பன்னிருபாட்டியல், என்பவைகளே இஞ்ஞான்று நமக்குக் கிடைத்துள்ளவை யாம்.

இப்பாட்டியல் நூற்களுள் நனி சிறந்தது பன்னிரு பாட் டியல் என்ப. என்னையெனின் பிறபாட்டியல்கள் பத்துப்பொருத் தங்களே கூறுகின்றன இப்பன்னிரு பாட்டியலோ பன்னிரு பொருத்தங்களைக் கூறுவதோடமையாது, தன் மதத்துக் கேற்ற மேற்கோட் சூத்திரங்களையும் தன்னகத்தே கொண்டு மிளிர்வ தாலும், கற்றூர்க்கு ஐயந்தீரப் பொருளை உணர்த்தலாலும், இந்நாள் விளங்கும் பாட்டியல் நூற்களுக்கெல்லாம் முற்பட்டது மாகத் திகழ்தலாலும், நனிசிறந்தது பன்னிரு பாட்டியல் என்ப.

இத்தகைய எழில் இலங்கும் பன்னிரு பாட்டியலுக்கு உரை கண்டாரும், பிறபாட்டியல் நூற்களுக்கு உரை கண்டாரும், நாட்பொருத்தத்திற்கு உரை கூறும் ஞான்று தவறிழைத்தனர். உண்மை உரை கண்டாரும் 'இருவர்'மாறுகோளையும் எடுத் தியம்பி, ஏற்றவையைக் கொள்க' என்றனர்.

பாட்டியல் நூலுக்கு உரை கூறப்போந்த அவ்வாசிரியர் கட்குச் சோதிடக்கலையில் பயிற்சி இன்மையே ஐயம் நிகழக் காரணமாம்.

மணமக்கட்கு நாட்பொருத்தம் பார்ப்பதே போன்று பாட்டு டைத் தலைவன் பிறந்த நாளுக்கு (நட்சத்திரத்திற்கு) அல்லது பெயரின் முதலெழுத்துக்குரிய நாளுக்குப் பொருத்தம் பார்த்து நலந்தரும் நாளுக்குரிய எழுத்தைப் பாட்டின் முதலெழுத்தாகக் கோடல் வேண்டும் எனப்பாட்டியல் கூறுதலானும், பாட்டுடைத் தலைவன் இராசிக்கு அட்டம இராசியின் கண் நின்ற நாளுக் குரிய எழுத்துக்களும், வைநாசிகமாகிய இருபத்திரண்டாம் நாளுக்குரிய எழுத்துக்களும், பொருந்தாது எனக் கூறு தலானும் இஃது சோதிடக் கலையின் ஓர் பிரிவாகும்.

என்னை? யெனின் விண்மீன்களைக் கொண்டும், இராசிகளைக் கொண்டும், பொருத்தம் அமைக்கும் முறை இருத்தலான் இஃது சோதிடக்கலையின் ஓர் பிரிவு என்பதில் எட்டுணையும் ஐயம் இன்று என அறிக.

இப்பாட்டியல் முறை தண்டமிழ் வழக்காயினும், வட மொழி வழக்காயினும், சாலச்சிறந்தது எனப்பண்டைத் தமிழகம் தன்னகத்தே கொண்டு மிளிர்ந்தது என்பது எந்துணிபு.

பாமேவு தமிழ் முனிவன் சொற்ற பாட்டியலின் பண்பறி யாது மயக்கம் கொண்ட உரை ஆசிரியர் தம் உரைகட்குச் செவிசாய்த்த இளந்தமிழ்ப் புலவர் மாட்டுள்ள ஐயம் எங்ஙனம் அகலும்?

இராசிகள் பன்னிரண்டும், அவ்விராசிகளில் அமைந்திருக் கும் இருபத்தேழு விண்மீன்களின் நிலைகளும், அறிந்தாற்றான் பாட்டியலின் தலையாய நாட்பொருத்தத்தை அறிய இயலும். ஆகையால் அவற்றை நன்கு அறிந்து சிந்தித்துத் தெளியுமாறு காட்டுதும்.

### இராசிகள் 12

| | | |
|---|---|---|
| 1. மேடம். | 5. சிம்மம் | 9. தனுசு |
| 2. இடபம். | 6. கன்னி. | 10. மகரம். |
| 3. மிதுனம். | 7. துலாம். | 11. கும்பம். |
| 4. கடகம். | 8. விருச்சிகம். | 12. மீனம். |

| | | | |
|---|---|---|---|
| 12<br>மீனம் | 1<br>மேடம் | 2<br>இடபம் | 3<br>மிதுனம் |
| 11<br>கும்பம் | இராசி<br>மண்டலம் | | 4<br>கடகம் |
| 10<br>மகரம் | | | 5<br>சிம்மம் |
| 9<br>தனுசு | 8<br>விருச்சிகம் | 7<br>துலாம் | 6<br>கன்னி |

இராசி ஒன்றுக்கு $2\frac{1}{4}$ விண்மீன்களாக 12. இராசிக்கு 27 விண்மீன்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

விண்மீன் ஒன்றுக்குக் கால்கள் நான்கு. இராசி ஒன்றுக்குக் கால்கள் ஒன்பது. ($2\frac{1}{4}$ விண்மீன்)

பன்னிரண்டு இராசிகளுக்கும் 108 கால்கள். இவ்விதம் அமைந்திருக்கும் 12 இராசிகளுக்கும் இராசி மண்டலம் என்று பெயர்.

## விண்மீன்கள் 27.

1. அசுபதி
2. பரணி
3. கார்த்திகை
4. உரோகணி
5. மிருகசீரிடம்
6. திருவாதிரை
7. புனர்பூசம்
8. பூசம்
9. ஆயில்யம்
10. மகம்
11. பூரம்
12. உத்திரம்
13. அத்தம்
14. சித்திரை
15. சுவாதி
16. விசாகம்
17. அனுடம்
18. கேட்டை
19. முலம்
20. பூராடம்
21. உத்திராடம்
22. திருவோணம்
23. அவிட்டம்
24. சதயம்
25. பூரட்டாதி
26. உத்திரட்டாதி
27. இரேவதி.

# இராசிகளில் விண்மீன்கள் நிற்கும் நிலை விளக்கம்

| இராசி | விண் மீன். | | இராசி | விண் மீன். | | இராசி | விண் மீன். | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. மேடம் | அசுபதி கால் | 1 | 5. சிம்மம் | மகம் கால் | 1 | 9. தனுசு | மூலம் கால் | 1 |
| | ... ... | 2 | | ... ... | 2 | | ... ... | 2 |
| | ... ... | 3 | | ... ... | 3 | | ... ... | 3 |
| | ... ... | 4 | | ... ... | 4 | | ... ... | 4 |
| | பரணி ... | 1 | | பூரம் ... | 1 | | பூராடம் ... | 1 |
| | ... ... | 2 | | ... ... | 2 | | ... ... | 2 |
| | ... ... | 3 | | ... ... | 3 | | ... ... | 3 |
| | ... ... | 4 | | ... ... | 4 | | ... ... | 4 |
| | கார்த்திகை ... | 1 | | உத்திரம் ... | 1 | | உத்திராடம் ... | 1 |
| 2. இடபம் | கார்த்திகை கால் | 2 | 6. கன்னி | உத்திரம் கால் | 2 | 10. மகரம் | உத்திராடம் கால் | 2 |
| | ... ... | 3 | | ... ... | 3 | | ... ... | 3 |
| | ... ... | 4 | | ... ... | 4 | | ... ... | 4 |
| | உரோகணி ... | 1 | | அத்தம் ... | 1 | | திருவோணம் ... | 1 |
| | ... ... | 2 | | ... ... | 2 | | ... ... | 2 |
| | ... ... | 3 | | ... ... | 3 | | ... ... | 3 |
| | ... ... | 4 | | ... ... | 4 | | ... ... | 4 |
| | மிருகசீரிடம் ... | 1 | | சித்திரை ... | 1 | | அவிட்டம் ... | 1 |
| | ... ... | 2 | | ... ... | 2 | | ... ... | 2 |
| 3. மிதுனம் | மிருகசீரிடம் கால் | 3 | 7. துலாம் | சித்திரை கால் | 3 | 11. கும்பம் | அவிட்டம் கால் | 3 |
| | ... ... | 4 | | ... ... | 4 | | ... ... | 4 |
| | திருவாதிரை ... | 1 | | சுவாதி ... | 1 | | சதயம் ... | 1 |
| | ... ... | 2 | | ... ... | 2 | | ... ... | 2 |
| | ... ... | 3 | | ... ... | 3 | | ... ... | 3 |
| | ... ... | 4 | | ... ... | 4 | | ... ... | 4 |
| | புனர் பூசம் ... | 1 | | விசாகம் ... | 1 | | பூரட்டாதி ... | 1 |
| | ... ... | 2 | | ... ... | 2 | | ... ... | 2 |
| | ... ... | 3 | | ... ... | 3 | | ... ... | 3 |
| 4. கடகம் | புனர் பூசம் கால் | 4 | 8. விருச்சிகம் | விசாகம் கால் | 4 | 12. மீனம் | பூரட்டாதி கால் | 4 |
| | பூசம் ... | 1 | | அனுடம் ... | 1 | | உத்திரட்டாதி... | 1 |
| | ... ... | 2 | | ... ... | 2 | | ... ... | 2 |
| | ... ... | 3 | | ... ... | 3 | | ... ... | 3 |
| | ... ... | 4 | | ... ... | 4 | | ... ... | 4 |
| | ஆயில்யம் ... | 1 | | கேட்டை ... | 1 | | இரேவதி ... | 1 |
| | ... ... | 2 | | ... ... | 2 | | ... ... | 2 |
| | ... ... | 3 | | ... ... | 3 | | ... ... | 3 |
| | ... ... | 4 | | ... ... | 4 | | ... ... | 4 |

(வளரும்)

1137-ம் ஞூ, புரட்டாசி, மார்கழி மாதங்களில்

## கலைக்கோயிலில் வரப்பெற்றுக்கொண்ட புத்தகங்களின் விபரம். (தொடர்ச்சி)

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| 9062 | கல்யாண் | Journal in Hindi. |
| 9063 to 66 | கனகாபிஷேக மலர் 1961 | தருமபுரஆதீனம். |
| 9067 | அபிஷேகத் திருமுறை (சம்பந்தர், அப்பர், சுந்தரர்) | ஷை |
| 9068 | ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுள் க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத்தமிழ் | திருவாவடுதுறை ஆதீனம். |
| 9069 | நீதிநெறி விளக்கம் (உரையுடன்) | ஆறுமுகநாவலர். |
| 9070 & 71 | திருக்குறள் பொதுநூலா? | சைவத்திரு. ஆ. ஈசுவரமூர்த்திப்பிள்ளை. |
| 9072 | ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் நெஞ்சுவிடுதூது (குறிப்புரையுடன்) | திருவாவடுதுறை ஆதீனம். |
| 9073 | நளவெண்பா (கலிதொடர், கலிநீங்கு காண்டங்கள்) | அ. சே. சுந்தரராஜன், B. A., |
| 9074 | குருமகா சந்நிதானங்களின் அற்புதங்களும் அருள் வரலாறுகளும் | தருமபுர ஆதீனம். |
| 9075 | கலைஞன் கண்ட கடவுள் | தொ. மு. பாஸ்கரத்தொண்டைமான். |
| 9076 & 77 | மூவர் தேவாரத் திரட்டு | திருப்பனந்தாள் செந்தமிழ் கல்லூரி வெளியீடு. |
| 9078 to 80 | மகாகயிலாய யாத்திரை | தருமை ஆதீனம். |
| 9081 & 82 | திருக்கைலாய யாத்திரை நினைவுச் சின்னங்களின் திறப்புவிழா | ஷை |

| | | |
|---|---|---|
| 9083 & 84 | மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய திருவெம்பாவை, திருப்பள்ளியெழுச்சி, | திரு. ரா. சண்முகசுந்தரஞ் செட்டியார், சைவ சித்தாந்த வெளியீடு. |
| 9085 & 86 | குறள் நீதி (அறம்) | திரு. ப. சு. கண்ணப்பர். |
| 9087 | திருக்குறளின் உட்கிடை சைவ சித்தாந்தமே | க. வஜ்ரவேல் முதலியார், B. A., L. T., |
| 9088 | 11ந் திருமுறை (நாற்பது திவ்யப் பிரபந்தங்களடங்கியது) | சைவ சித்தாந்த மகா சமாஜம், திருவருளகம், 22-A கல்லுக்காரத்தெரு, மயிலாப்பூர், சென்னை. |
| 9089 | திருக்கோவையார், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு | அ. சோமசுந்தரம் செட்டியார், M. A., |
| 9090 | சிவபோக சாரமும், சொக்கநாத வெண்பாவும் | தருமபுர ஆதீனம். |
| 9091 | திருமறைக்காடு திருப்பதிகங்கள் | ஷை |
| 9092 | திருவுத்தரகோசமங்கை மங்களேசுவரி பிள்ளைத் தமிழ் | திரு. க. சுப்பிரமணிய அய்யர். |
| 9093 | தேவாரத்திரட்டு (முதல் பாகம்) | அ. சோமசுந்தரஞ் செட்டியார், M. A., |
| 9094 | திருநாவுக்கரசு சுவாமிகள் வரலாறு | கயப்பாக்கம் சோமசுந்தரஞ் செட்டியார். |
| 9095 | சேக்கிழார் சுவாமிகள் வரலாறு | ஷை |
| 9096 | பாவநாசத் தலவரலாறு | தேவஸ்தான வெளியீடு. |
| 9097 | பொய்யடிமையில்லாத புலவர் யார்? | பாலூர் கண்ணப்ப முதலியார். |
| 9098 | ஆலய வழிகாட்டி, சிவ, விஷ்ணு பிரபலவைப்பு ஸ்தலங்கள் விபரம் அடங்கியது. | க. வெ. அருணகிரி முதலியார், கணபதி வாசகசாலை, 92, காமாட்சிகோயில் தெரு, காஞ்சீபுரம். |
| 9099 | திருக்குறள்-அறத்துப்பால் (ஹிந்திமொழி பெயர்ப்பு) | Sri B. D. Jain Avl., M. A., L. L. B., |
| 9100 | திருவிளையாடற் புராணத்தில் திருவாதவூரர் | ஸ்ரீவத்ஸ N. ஸ்ரீனிவாசன். |
| 9101 | திருக்குறள் காமத்துப்பால் (பரிமேலழகர் உரை) | வை. சுந்தரேச வாண்டையார். |

| | | |
|---|---|---|
| 9102 | திருக்குற்ருலத் திருப்பதிகங்கள் | தருமபுர ஆதீனம் |
| 9103 | திருக்குற்ருலப் பதிகம் | திருக்குற்ருலநாதர் கோயில், சாரல் மாநாட்டு வெளியீடு. |
| 9104 | உவமான வணக்கம் | பண்டித இராமசுப்பிரமணிய நாவலர். |
| 9105 & 106 | Service and conduct Rules | Sri. K. G. S. High School, Aduthurai. |
| 9107 | The Message of Saint Thayumanavar | K. Ramachandran Pillai, B. A., B L., |
| 9108 | Five Tamil Idylls of Paththuppattu | T. M. Somasundaram Pillai, B. A., B. L., |
| 9109 | Hindi Book | |
| 9110 | The Journal of the Tanjore Sarasvathi Mahal Library | S. Gopalan, B.A., B.L., Honarrary Secretary, T. M. S. S. M. Library, Tanjore. |
| 9111 | கல்யாண் | |
| 9112 to 14 | சேய்த் தொண்டர் புராணம் (முருகவேளின் பன்னிரு திருமுறையில் 12ம் திருமுறை) | தேனூர், வரகவி வே. சே. சொக்கலிங்கனூர். |
| 9115 | திருக்குறள் | Justice Mr. V. Subramaniam, High [Court, Madras. |
| 9116 & 17 | Tirukkural Tamil Text with Hindi Translation | Prop: B. D. Jain, M. A., L. L. B., |
| 9118 & 19 | ஹிந்து தர்மம் | தேவ் பந்த் தாருல் உலூம் தலைமை யாசிரியர், குது புஜ்ஜமான் ஷைகுல் இஸ்லாம் ஹஜ்ரத் மௌலானு சையத் ஹுஸைன் அஹமது மதனீ அவர்களின் ஊழியன் கூ. அ. ராஜ்முகம்மது பண்டாரவாடை. |

| | | |
|---|---|---|
| 9120 & 21 | வேங்கடமுதல் குமரிவரை | தொ. மு. பாஸ்கரத்தொண்டைமான். |
| 9122 | ,, (பொன்னியின் மடியிலே) | ,, |
| 9123 | ஸ்ரீமத் கம்பராமாயணம் (சுந்தரகாண்டம்) | உ. வே. சாமிநாதய்யர். |
| 9124 & 25 | அப்பர் விருந்து | ஜி. சுப்பிரமணிய பிள்ளை. |
| 9126 to 28 | ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரி திருப்பனந்தாள் “நாட் குறிப்பு” 1961 — 62 | ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள், திருப்பனந்தாள். |
| 9129 | அருள்நெறித் தொடர் மணிவாசகர் — முலர்மணி மொழிகள் | சாமி. சிதம்பரனுர், தமிழ் புத்தகாலயம், 393, பைகிராப்ட்ஸ் ரோடு சென்னை-14. |
| 9130 & 31 | அவிநாசித்தல புராணம் (பொழிப்புரையுடன்) | திரு. த. ச. மீனுட்சிசுந்தரம் பிள்ளை & திரு. குழந்தைவேற் பிள்ளை. |
| 9132 & 33 | A Descriptive catalogue of Tamil manscripts in vol. II (Nos 441 - 1132) | By, Dr. V. Swaminatha Iyer's Library, Adyar, Madras-20. |
| 9134 | மகாபாரதம் (ஆதிபருவம், சபாபருவம்) | வியாசர் அருளியது, வானதி பதிப்பகம் அ. லெ. நடராஜன். |
| 9135 | கங்கைகொண்ட சோழபுரம், ஸ்ரீ பிரகதீஸ்வரர் (பெருவுடையார்) கோயில் வரலாறு | Sri. R. பஞ்சநதம் பிள்ளை, தமிழாசிரியர், வரலாற்றுச் செல்வர், திருச்சி, தேவஸ்தானம் வெளியீடு. |
| 9136 | Uchchishta Ganapathy | T. S. Sundaresa Sarma West Main Street Tanjore. |

| | | |
|---|---|---|
| 9137 | The Life of St. Ramalingar | By. P. Mutharasu, M. A., B. T Lecturer. in Tamil M.D. T. Hindu College, Tirunelveli4 |
| 9138 | ஸார்வாரி ஸம்வத்ஸா ஸ்ரீஸாரதா நவராத்ரி பூஜா மஹோத்ஸவ வெளியீடு | ஸ்ரீ பூர்ணுநந்தநாத ஸ்ரீ வித்யாபீடம் 59. தம்பு செட்டித்தெரு, சென்னை–1. |
| 9139 | ஸ்ரீ பூர்ணுநந்த நாத ஸ்ரீவித்யா பீடம், சென்னை | பிவவ ஸம்வத்ஸர வைகாசி விசாக பூஜா வெளியீடு. |
| 9140 | ஷ்டி ஷ்டி | சார்வாரீ ஸம்வத்ஸர ஆஷாட நவராத்ரீ பூஜா மகோத்ஸவ வெளியீடு. |
| 9141 | தமிழ் மலர் | பண்டித இராமசுப்பிரமணிய நாவலர், செந்தமிழ் நிலையம், தக்கலை. |
| 9142 | தென்றமிழ்ப் பாவை | ஷ்டி |
| 9143 | அணிநாற்பது | ஷ்டி. |
| 9144 | அருண்மணி மாலை | ஷ்டி |
| 9145 & 46 | பாடல் பெற்ற திருக்கோயில்கள் வழி விளக்கப் படங்கள் (புகைவண்டி நிலையங்கள் வழி) | தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1. |
| 9147 | சன்மார்க்க சமயம் (காந்தி) | சர்வோதயப் பிரசுராலயம், தஞ்சை. |
| 9148 | சைவ உணவின் சிறப்பு (காந்தி) | ஷ்டி |
| 9149 | கர்பத்தடையா, பிரமசரியமா? | ஷ்டி |
| 9150 | காந்தியும், மார்க்ஸும் | ஆசிரியர், க. மஸ்ருவாலா, சர்வோதயப் பிரசு-ராலயம் தஞ்சை. |
| 9151 | காந்திய நவநீதம் | ஷ்டி |

| | | |
|---|---|---|
| 9152 | சாந்திசேனை | விநோபா ஷெ |
| 9153 | சத்திய சோதனை (மகாத்மா காந்தியின் சுயசரிதை) | தமிழ்நாடு காந்தி நினைவுநிதி வெளியீடு. |
| 9154 to 57 | திருவூறல் திருப்பதிகம் | தருமபுர ஆதீனம் வெளியீடு. |
| 9158 to 62 | திருவிற்கோலத் திருப்பதிகம் | ஷெ |
| 9163 to 66 | திரு இலம்பையங் கோட்டூர்த் திருப்பதிகம் | ஷெ |
| 9167 to 70 | ஆபதுத்தாரணர் மாலை | ஷெ |
| 9171 to 75 | உண்மை விளக்கம் (உரைநடையுடன்) | ஷெ |
| 9176 to 80 | திருஆலங்காடு திருப்பதிகங்கள் | ஷெ |
| 9181 to 87 | திருக்களிற்றுப்படியார் (உரையுடன்) | ஷெ |
| 9188 to 90 | முருகன் பாமாலைத் திரட்டு | பழனி ஸ்ரீ தண்டாயுதபாணி ஸ்வாமி தேவஸ்தான கும்பாபிஷேக வெளியீடு. |
| 9191 to 93 | முருகன் பிள்ளைத் தமிழ்த் திரட்டு | திருச்செந்தூர் ஆறுமுக சுவாமி தேவஸ்தான வெளியீடு. |
| 9194 to 97 | திருக்கானாட்டுமுள்ளூர்த் திருப்பதிகம் | தருமபுர ஆதீன வெளியீடு. |
| 9198 to 9200 | திருப்பாசூர்த் திருப்பதிகங்கள் | ஷெ |
| 9201 | கந்தர் அநுபூதி | வேல்முருக சித்தன் சுந்தரலோகநாதன் இலவச வெளியீடு. |
| 9202 | கல்யாண் | |

(தொடரும்)

உ

## திருப்பனந்தாள் – ஸ்ரீ காசி மடம்

# ‘திருமுறை வெளியீடுகள்’

| | | ரூ. ந. பை |
|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை | ... 0 06 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | ... 3 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | ... 3 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம்மட்டும்) (புதிய பதிப்பு) | ... 2 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் ,, ,, | ... 2 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் (புதிய பதிப்பு) ,, | ... 1 30 |
| 7* | திருவாசகம் (அச்சில்) | |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழையவுரையும் (புதிய பதிப்பு) | ... 2 90 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் (மூலம்மட்டும்) | ... 0 56 |
| 10* | திருமந்திரம் ,, (புதிய பதிப்பு) | ... 2 25 |
| 11 | பதினோராந்திருமுறை ,, | ... 1 25 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) | ... 0 25 |
| 13 | திருக்கைலாயஞானவுலா - உரையுடன் | ... 0 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம்மட்டும்) | ... 2 50 |
| 15* | அகத்தியர் தேவாரத்திரட்டு | ... 0 37 |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலம்மட்டும்) | ... 3 00 |
| 17 | தாயுமான சுவாமிகள் பாடல்-குறிப்புரையுடன் (அச்சில்) | ... |
| 18 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம்மட்டும்) | ... 1 75 |
| 19 | கந்தபுராணம் – முதல் மூன்று காண்டங்கள் ,, | ... 2 75 |
| 20 | ,, யுத்த தேவகாண்டம் ,, | ... 2 00 |
| 21 | ,, தக்ஷகாண்டம் ,, | ... 1 50 |
| 22 | கந்தபுராண வசனம் (அச்சில்) | |
| 23 | கந்தர் அலங்காரம் - குறிப்புரையுடன் | ... 0 25 |
| 24 | கந்தரனுபூதி | ... 0 13 |
| 25 | கந்தர் கலிவெண்பா – ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் | ... 0 37 |
| 26 | கந்தர் கலிவெண்பா - மூலம் மட்டும் | ... 0 06 |
| 27 | கந்தர் கலிவெண்பா - மூலமும் – உரையும் | ... 0 37 |
| 28 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... 0 50 |
| 29 | சகலகலாவல்லிமாலை – ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... 0 06 |
| 30 | சிவஞான சித்தியார், ஹிந்தி மட்டும் | ... 1 00 |
| 31 | திருக்குறள் - அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் | ... 1 50 |
| 32 | திருக்குறள் – பொருட்பால் ,, | ... 2 50 |
| 33 | திருக்குறள் – காமத்துப்பால் ,, | ... 1 00 |
| | ஷ 31, 32, 33 திருக்குறள் 3 புத்தகமும் | ... 4 00 |

Registered With the Registrar of Newspapers for India
Under No. R. No. 1485/57.

Regd No. M. 5574 குமரகுருபரன்.

| | | | |
|---|---|---|---|
| 34 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் | ... | 0 75 |
| 35 | திருக்குறள் - பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ... | 0 13 |
| 36 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | ... | 0 75 |
| 37 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் | ... | 0 37 |
| 38 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனுட்சியம்மை இரட்டைமணி மாலை- மதுரை மீனுட்சியம்மை குறம் | ... | 2 75 |
| 39 | திருவாரூர் நான்மணிமாலை – முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | ... | 1 25 |
| 40 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை- தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... | 1 00 |
| 41 | பண்டார மும்மணிக் கோவை – காசிக் கலம்பகம் – சகலகலாவல்லி மாலை | ... | 1 00 |
| 42 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... | 0 75 |
| 43 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | ... | 0 50 |
| 44 | தமிழிசைப்பாக்கள் [அச்சில்] | | |
| 45 | பெரியபுராணம் – உரைநடை | ... | 2 00 |
| 46 | திருவிளையாடற் புராணம் – உரைநடை | ... | 2 25 |
| 47 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... | 0 50 |
| 48 | அபிராமி பட்டர் பிரபந்தம் (மூலம்மட்டும்) (அச்சில்) | ... | |
| 49 | திருக்கயிலைத் திருமுறை | ... | 0 37 |
| 50 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... | 0 19 |
| 51 | செந்திலாண்டவன் மகிமை | ... | 0 13 |
| 52 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்பு | ... | 1 37 |
| 53 | ஷை ஷை பொருட்பால் 2-ம் பதிப்பு | ... | 2 75 |
| 54 | ஷை ஷை காமத்துப்பால் ஷை | ... | 1 20 |
| 55 | அபிராமி அந்தாதி – தெளிவுரையுடன் | ... | 0 50 |
| 56 | மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்) | ... | 0 50 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்,
"தியாகராஜ விலாசம்" 53, பிள்ளையார் கோவில்தெரு, திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

குறிப்பு:- * இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.

அச்சிட்டது:- குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் - '62.